# செந்தமிழ்ச் செல்வி

Acc. No - 38095

## பொன் விழா ஆண்டு

தமிழ்மொழி, இனம், நாடு
இவற்றின் முன்னேற்றத்தைக்
குறிக்கோளாகக் கொண்டு
நடைபெற்றுவரும்
இத் திங்கள் வெளியீட்டின்
ஐம்பதாவது சிலம்பு

எட்டாவது பரல்

அரசு....

சிலம்பு-ருo] வள்ளுவர் ஆண்டு உ௦௦எ. பங்குனி (Apr. '76) [பரல்-அ

## 'செந்தமிழ்ச் செல்வி'

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்


க. டாக்டர் ந. சஞ்சீவி, எம். ஏ., பி.எச்டி.
தமிழ்த்துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்

உ. 'சித்தாந்த கலாநிதி', உரைவேந்தர்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், மதுரை

ங. திரு. கொண்டல், சு. மகாதேவன் அவர்கள், எம். ஏ., பி. எஸ்ஸி
இயக்குநர், தமிழகவரசு தமிழ் வளர்ச்சித்துறை.

ச. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப். லிங்.
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.

ரு. செந்தமிழ்க் கலைமணி, வித்துவான்,
பண்டித, கா. பொ. இரத்தினம் அவர்கள்,
பி.ஏ. (ஆனர்சு), (லண்டன்) எம்.ஏ., பி.ஓ.எல். (சென்னை)
கொழும்பு.

சு. புலவர் இரா. இளங்குமரன்,
திருநகர், மதுரை-6.

எ. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை.


---

## உள்ளுறை


| | பக்கம் |
|---|---|
| நூற்பதிப்புக் கழகமும் மறைமலையடிகள் நூலகமும் | சகஎ |
| மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி | சஉ0 |
| உயிர் மெய்ம்முதல் வேர்ச் சொற்கள் | சச0 |
| சங்க நூல்களில் மீன்கள் | சருக |
| இசை | சருஅ |
| பாட்டும் கூத்தும் பற்றிய அறக்கட்டளைச் சொற்பொழிவு | சகூங |
| 'கழனி வளமும் காவிரி நீரும்' வெளியீட்டு விழா | சகூச |
| செய்திகளும் குறிப்புகளும் | சகூச(அ) |
| மதிப்புரை | சகூச(இ) |

16475

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு ൫௦ | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦எ, பங்குனி ஏப்ரல் 1976 | பரல் அ

## நூற்பதிப்புக் கழகமும் மறைமலையடிகள் நூலகமும்

தமிழ் நூல்களை எல்லாம் தேடித் தொகுத்து அழகுற அச்சிட்டுப் பரப்பும் பெருநோக்குடன் சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் கூட்டுப்பங்கு நிறுவனமாக 1920 செப்டம்பர்த் திங்கள் திருநெல்வேலியில் பதிவு செய்யப்பெற்றது. பதிப்புத் துறைக்கு இந்தியாவிலேயே முதன்முதல் தோன்றிய கூட்டுப் பங்கு நிறுவனம் இதுவே யாகும்.

புத்தகங்களை அச்சிட்டு விற்று வரப்பெறும் ஊதியத்தில் நேர்பாதி சைவசித்தாந்த சங்கம், தமிழ்ச் சங்கம் ஆகிய இரண்டு அறநிலையங்கட்கு வழங்கப்படுகின்றது. அவற்றுள் சைவசித் தாந்த சங்கமே 1924 ஆம் ஆண்டுமுதல் திருநெல்வேலியில் சிவஞானமுனிவர் நூல்நிலையத்தினை ஆராய்ச்சியாளருக்குப் பயன்படும் வகையில் நடத்திவருகின்றது. 1958 ஆகஃச்டில் சென்னையில் மறைமலையடிகள் நூலகம் திறக்கப்பெற்றுச் சீரும் சிறப்புமாக நடைபெற்று வருகின்றது.

மறைமலையடிகளார் பிறந்தது 1876 ஆம் ஆண்டு. என் அருமைத் தமையனாரும் கழகத்தை நிறுவியவருமாகிய திருவரங் கனார் அடிகளாரை முதன்முதல் இலங்கையிற் கண்டது 1914. இவ்விரண்டிற்கும் இடையீடு 38 ஆண்டுகளாகும்.

கழகம் தோன்றியது 1920. மறைமலையடிகள் நூலகம் கழகவழி அமைக்கப் பெற்றது 1958. இவற்றிற்குள்ள இடை யீடு 38 ஆண்டுகளாகும். இங்கே ஓர் ஒற்றுமை காண்பது வியப்புக்குரியது.

என் அருமைத் தமையனார் கல்வி அறிவோடு வினைத்திட்பமும் தொழில்நுட்பமும் உடையவர். அவர்கள் இலங்கையில் நெல்லை வேளாள வணிகர் கடை ஒன்றில் கணக் கராய் அமர்ந்து பணியாற்றுகையில் மறைமலையடிகளார் நூல்

களை வரவழைத்துப் படித்துச் சுவைத்து அவர்கள்பால் அளவிலா அன்புடையவரானார். அடிகளுடைய திருத்தொண்டு வளர்வதற்கு ஏற்றஉரமாகவும் நறுநீராகவும் திருவரங்கனார் பயன்படலாயினர். பின்னர் அடிகளார் பல்லாவரத்தில் பொது நிலைக் கழகம் என்னும் மாளிகை கட்டுவதற்கும், தாம் எழுதிய நூல்களை அச்சிடுவதற்கு ஓர் அச்சகம் அமைப்பதற்கும் திருவரங்கனார் வேண்டும் பொருள் தொகுத்து அனுப்பி வைத்தனர். இவ் விருவர்க்கும் ஏற்பட்ட இவ்வருட் பிணைப்பே திருவரங்கனாரை அடிகளார்க்கு மருகர்கிழமை ஆக்குவித்தது.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் நோக்கம் தமிழ் நூல்களை எல்லாம் அச்சிடுவதுமட்டும் அல்லாமல் அவை யாண்டும் கிடைக்கப்பெறச் செய்வதுமாகும். அதனாலேயே சென்னையில் தலைமை நிலையமும் நெல்லை, மதுரை, கோவை, குடந்தை, திருச்சி ஆகிய பேரூர்களில் கிளை நிலையங்களும் அமைத்துத் தமிழ் நூல்கள் யாவும் வேண்டுவார்க்கு எளிதிலே கிடைப்பதற்கு வகை செய்துள்ளது.

எல்லா நூல்களையும் எல்லாரும் வாங்கிப் படிப்பதற்கு இயலாதாகையால் நூல்நிலையங்களை அமைத்துப் படிப்பதற்கு வாய்ப்பு ஏற்படுத்த வேண்டும் என்பது கழகத்தின் அடிப்படை நோக்கமாகும். எனவே, நெல்லையில் சிவஞானமுனிவர் நூல் நிலையமும், சென்னையில் மறைமலையடிகள் நூலகமும், பல்லாவரத்தில் அடிகள் வாழ்ந்த இல்லத்தைத் தமிழக அரசு நடுவணரசு இவற்றின் பொருளுதவியுடன் வாங்கி அதனைக் கலை மன்றமாக்கி அங்கு ஒரு நூல்நிலையமும் அமைத்து நடத்தி வருகின்றது.

சென்னையில் மறைமலையடிகள் நூலகத்திலே அடிகளார் தாம் ஆராய்ந்த 4000 நூல்கள் இடம்பெற்றிருக்கின்றன. அவர்கள் படித்த நூல்களில் எல்லாம் அடிக்கோடுகளும், ஓரக் குறிப்புகளும் காணப்பெறும். இப்போது பலதுறை நூல்கள் படிப்பதற்கு வரும் மக்களுக்கு அடிகளார் எழுதியிருக்கும் குறிப்புக்கள் பெரும் பயன் தருகின்றன.

அடிகளார் தம் இறுதிக்காலம்வரை நாடோறும் நூல்களைப் படிப்பதிலே பேரார்வம் காட்டியுள்ளார் என்பது அவர் எழுதிய நாட்குறிப்புகளால் அறியக் கிடக்கின்றது. அதனால் அவர்கள் கலைக்களஞ்சியமாக விளங்கினார்கள்.

கழகம் புத்தக விற்பனை வருவாயைக் கொண்டு இதுகாறும் நூல்நிலையங்களை நடத்தி வந்தது. அரசு பாடநூல்களை வெளியிட்டது முதல் புத்தக விற்பனை குறைந்தமையால் விற்பனை ஊதியமும் மிகவும் குறைந்துவிட்டது. எனவே தமிழக அரசு, நடுவணரசு இவற்றின் பொருளுதவி இல்லாமல் நூல் நிலையங்களை இனி நடத்தமுடியாதநிலை ஏற்பட்டுக் கழகம் நடுவணரசுக்

கும், தமிழக அரசுக்கும் பொருளுதவி கேட்டு விண்ணப்பம் அனுப்பியுள்ளது. நடுவணரசு 1974-75 க்கு ரூ 3,000 மும், 1975-76 க்கு ரூ. 7,000 மும் பொருளுதவி (மான்யம்) வழங்கி யுள்ளது. தமிழக அரசு 1974-75 க்கு யாதொரு தொகையும் வழங்கவில்லை. 1975-76க்கு மட்டும் ரூ. 10,000 வழங்கி உள்ளது.

ஆண்டுக்காண்டு பிறைமதிபோல் வளர்ந்துவரும் மறைமலை யடிகள் நூலகத்திற்கு இவ்வளவு குறைந்த பொருளுதவி போதாது. நூல்களை மேலும் பாதுகாப்பதற்குத் தனியே வளிவரை காப்புடைய அறை (air-conditioned room) ஒன்று வேண்டும். தூசி அகற்றும் மின்பொறி (dust-cleaner) ஒன்றும், மின் படப்பதிவுக் கருவி (microfilm) ஒன்றும் வேண்டப்படும். மேலும் மேலைநாடுகளிலே நூல்களைப் பாதுகாப்பதற்குக் கையாளப்பெறும் புதுமுறைகளைக் கடைப்பிடித்தலும் வேண்டும்.

மறைமலையடிகள் நூலகத்தை எம்.ஏ., எம்.லிட்., பி.எச்.டி. முதலிய பட்டங்களுக்கு நூல்களை ஆராய்ச்சி செய்ய வருவார் களும் சில தனித் துறைகளில் நூல்களை ஆராய வருபவர்களும் மறைமலையடிகள் நூலகத்தின் தனிப்பெருஞ் சிறப்பினைப் போற்றி மகிழ்கின்றனர். நூலகத்தில் தமிழில் முதுகலைப் பட்டமும் (எம். ஏ.,) நூலக இயலிலே இளங்கநிலைப் பட்டமும் (பி.லைப்) பெற்றுள்ள ஒருவர் நூலகராக இருந்து வருகிறார். அவர் செய்யும் உதவிகளை நூலாய வருபவர்கள் பெரிதும் போற்றுகின்றனர்.

வெளிநாடுகளிலிருந்து அறிஞர் பெருமக்கள் வெவ்வேறு துறைகளில் ஆராய்ச்சி செய்ய வருகின்றனர். செக் நாட்டி லிருந்து ஒருவர் கட்டபொம்மனைப் பற்றி ஆராய வந்தனர். அவர் தமக்கு வேண்டிய நூல்கள் அனைத்தும் ஒருங்கே கிடைக் கப்பெற்றன என்று மகிழ்ந்து பாராட்டுரை வழங்கினர்.

பிரான்சு நாட்டிலிருந்து வந்த நூலகர் ஒருவர் தமிழில் அச்சுக்கலை வந்த காலமுதல் பதிப்பிக்கப்பெற்ற புத்தகங்களைப் பார்க்க வேண்டுமென்றனர். ஏறக்குறைய எல்லா நூல்களுமே இங்கு இருக்கக்கண்டு வியந்தனர். மற்றொருவர் முதன் முதல் அச்சிடப்பெற்ற அகரமுதலியையும் அதற்குப்பின் இந்நாள்வரை வெளியிடப்பெற்றுள்ள பலவகை அகர முதலிகள் நிகண்டுகள் ஆகியவற்றையும் பார்க்கவேண்டும் என விரும்பினர். அவை யாவும் நூல்நிலையத்தில் போற்றிவைக்கப்பெற் றிருப்பதைக் கண்டு பெரு மகிழ்வுற்றனர்.

தமிழ்ப்புலவர்களுக்கெல்லாம் ஒளி விளக்காக இருந்து மறைந்த மறைமலையடிகளார் தமிழ் மக்களுக்கு வழங்கிய அறிவுச் செல்வங்களை மேலும் போற்றி வளர்ப்பதற்குத் தமிழ் அறிஞர் பெருமக்கள் உதவி என்றென்றும் வேண்டப்பெறு கின்றது.



# மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி

*மாணவர், திருக்குறள்பீடம் குருகுலம்*

**அழகரடிகள் (இளவழகனர்)**

## 8. ஆராய்ச்சித் திறம்

ஆராய்ச்சித் திறம் பற்றி அடிகளார் வரலாற்றிற் கூறப் புகுவது, 'கொல்லன் தெருவில் ஊசி விற்றலை' ஒக்கும். எதை எடுத்தாலும், ஆராய்ச்சியாற் சாணை பிடித்தன்றி எழுதுவதோ பேசுவதோ அடிகளுக்கு இயலாது. 'ஆராய்ச்சி' என்னும் முறை, முன்னும் இருந்தாலும், ஆங்கிலக் கல்வி வல்லமையாலும், மெய்யருள் பெற்றுடைமையாலும், அடிகளால் சுடர் விட்டு விளங்கியது;

ஒரு பொற் கட்டி சுடர் விட வேண்டுமானல், பொற்கொல்லரின் தீமூட்டியில் அது காய்ச்சப்படும்; ''சுடச் சுடரும் பொன் போல்'' என்பார் திருவள்ளுவர். துன்பம் சுடச்சுடத்தான் ஆன்மாக்களும் மலங்கழன்று தவ ஒளி வீசுகின்றன; பிறவித் தீயில் மக்கள் அவ்வாறு மலம் தீய்ந்து ஒளி விளங்குகின்றனர். எந்தப் பொருளும் தன்னியல்பில் ஒளிபெறுவதற்குச் சுடு முறைமை இன்றியமையாததாயிருக்கிறது.

அடிகளார் ஆராய்ச்சிச் சாணையில் நெருப்புப் பொறிகள் நாற்புறமும் பறக்கும்; முரணியிருப்போர் அதனைப் பார்த்துப் பார்த்து அஞ்சி மாழ்குவர்; மருளுவர்; விலகி ஏதேனும் பேசுவர்; அடிகள் எதையும் பொருட்படுத்தமாட்டார்; தம் செயலிலேயே கண்ணும் கருத்துமா யிருப்பார். அணுகியிருப்போர், விளக்கங்கள் பெறுவர்.

அடிகளார் ஆராய்ச்சி, எடுத்துக்கொண்ட பொருளை மட்டும் சுடுவதன்று; நாட்டவரையும், அறிஞரென்று பேசிக் கொள்வோரையும் சுடும். சுட்டு இருபக்கமும் ஒளி பெருக்கும்; இருள் விலக்கும். அடிகளார் ஆராய்ச்சிகளால், நாட்டுக்குப் பெரும்பாலும் நன்மையே யல்லது தீங்கில்லை.

விளைவுகள் :

1. குன்று முட்டிய குரீஇப் போல, சில நிலைகளில் எப்படி ஆராய்வது என்று திகைக்குமிடங்களிலெல்லாம், அடிகளார் எவ்வாறே தமது நுண்ணறிவு நுண்ணுணர்வுகளால் திருகி ஆராய்வார்; கடந்து வெற்றி காண்பார்.

எழுத்துக்களில், பேச்சுக்களில் சில இடங்கள் குறிப்பாக வும் இருக்கும்; அந்நிலைகளில் ஆராய்ச்சி இன்றியமையாதது; குறிப்பாயிருக்குங் கருத்துக்களை அது வெளிப்படச் செய்யும்; ஆராய்ச்சியால் விளையும் நன்மைகள் பல; அவற்றுள் ஈது ஒன்று.

2. நூல்களில் ஓரிடத்திலுள்ள கருத்து அந்நூல்களி லேயே மற்றோரிடத்தும், முரண்பட்டது போலவும், தோற்றும்; ஆராய்ச்சி அம் முரணறுத்து இணக்கப்படுத்திச் செல்லும்.

3. அளவைகளின் அடிப்படையிலும் இலக்கண முறை களிலும் கருத்துக்கள் பின்னிக் கிடக்கும்; ஆராய்ச்சி, சிக்கல் அவிழ்த்து உதவும்.

4. சுருக்கமாகச் சொல்லப்பட்டதை விரித்து விளக்கியும், விரிவாக விளக்கப்பட்டதைச் சுருக்கமாக எடுத்துக் காட்டியும், விடுபட்டிருப்பதைத் தொடுத்துத் தெளிவுபடுத்தியும், காரண காரிய இயைபு தேற்றியும், தேவைக்கேற்ப வேண்டுவதைப் புலப்படுத்தியும் செல்லுவது ஆராய்ச்சி.

5. முற்கால பிற்கால அமைவுகளும், அவற்றிற் கேற்ற வாறு நூலாசிரியரையும் அறியாதபடி அமைந்துவிடும் 'உலகியற்கை' 'வாழ்க்கைப் பழக்கம்' முதலிய பலவும் ஆராய்ச்சி யால் விளங்கிவிடும்.

6. கருத்துக்கள் ஒவ்வொரு நூலில் ஒவ்வொரு வகையாக அமைந்திருக்கும்; அவை, இன்ன நூலில் இன்ன வகையாக இன்ன தோற்றத்தில் வந்திருக்கின்றன என்று தெரிந்து தெளிந்துகொள்வதற்கும் ஆராய்ச்சி துணை செய்யும்.

7. கருத்துக்களை அறிந்து கொள்ளவே நூல்கள் உள்ளன; அக் கருத்துக்கள் சொற்களின் மூலமாக வெளிப்படு தலே முதல்நிலை. சொற்களின் ஒழுங்கு சில நூல்களில் நூலா சிரியராலும், பெயர்த்தெழுதுவாராலும், பதிப்பாசிரியராலும், இடைச் செருகல் செய்வாராலும் சீராக அமையாமல் பொருட் குழப்பம் செய்யும்; விடுவித்துச் சீராக்குவதற்கு, ஆராய்ச்சி இன்றியமையாதது.

8. முதல் நூலாகவும் வழிநூலாகவும் சார்பு நூலாகவும் அமைந்து நூல்கள் தத்தம் முறைமைக் கேற்பக் கருத்துக்களை வகுத்துக் கொண்டு போகும்; அம் முறைமை அறிந்து 'வண்ணம்' 'வடிவு' 'வழக்கு' 'அடிப்படை' தெரிந்து தெளிவுபடுத்துவது ஆராய்ச்சி.

9. அயல் மொழிகள், அயல் வழக்குகள்; பிரிந்து வேருகிய தன் மொழிகள், வழக்குகள்; ஒரு மொழியிலேயே பழைய புதிய அமைதிகள், வழக்குகள் முதலிய பலவும் ஒப்பு நோக்கி உண்மைகள் தேறுவதற்கும் ஆராய்ச்சிகள் வகை செய்யும்.

10. எதனையும் சொற்பிறப்பு முறையில் பொருட் பரப்பு வடிவறிய வழியாயிருப்பது ஆராய்ச்சியே.

**அமைவுகள் :**

ஆராய்ச்சி செய்வார், உண்மை காண்பதே நோக்கமாய் இருக்க வேண்டும்; உழைப்புக்குப் பின்வாங்கக் கூடாது; பல கால் பல முகமாக ஆழ்ந்து ஊடுருவி அறியுந் திறமும், இரண்டிலொன்று துணியும் துணிவும், அதற்கேற்ற நுண்ணுணர்வும் இயல்பாகவே பெற்றிருக்க வேண்டும். பொதுநலன், சிறப்புடன் பொலிய வேண்டும்; கடமையுணர்வு மிக்கிருக்க வேண்டும்; 'சார்பும்' அதிற் 'பற்றும்' அற்ற நடுநிலைப் பான்மையும் இன்றியமையாதது; அளவற்ற பொறுமையும், நேர்மையும், பொச்சாவாமையும், ஆராய்ச்சியில் ஒரு தனிப்பட்ட வேட்கையும் வேண்டப்படும். தாம் உலகுக்குப் பயன்படுவதே தம் வாழ்க்கைக் குறிக்கோள் என்னும் சேவையுள்ளம் உடையவராய், மெய்ப்பொருள் காணும் இப் பயன்படுஞ் செயல், 'ஒரு முக்கியமான தொண்டு' எனக் கொண்ட திருத் தொண்டராய், ஆராய்ச்சிச் செயலை மேற்கொள்ள வேண்டும்; ஆராய்ச்சி நாட்டம் புலமைப் பெருமை கூட்டும்.

**கருவில் திரு :**

ஆராய்ச்சியுறிவு மிக வேண்டுமானல் அதற்குச் சிந்தனைச் செல்வம் சிறப்பாக அமையவேண்டும்; ஆராய்ச்சியாளராக எல்லாரும் அமைதல் அருமை; அடிகளாருக்கு முன்னைத் தவத்தால் அனைத்தும் அருமையாக அமைந்துவிட்டன; அமைந்த ஒவ்வொன்றும் ஈடு இணை அற்றவை; நேரிற் கண்டு திளைத்தவர் அனைவர்க்கும் இவ்வுண்மை வெளிப்படை! இது ஏதோ அருள்! உலகம் இடர்ப்படுங் காலங்களில், எல்லாம் வல்ல இறைவனே இங்ஙனம் தோற்றங் கொள்வான் என்பதில், உண்மை நிழலாடிக்கொண்டுதான் இருக்கிறது. அடிகளிடம் அனைத்தும் ஒருங்கமைந்து விளங்கின என்பதைவிட, அவர்கள்பால் அமையாதன யாவை? என்று கேட்பதே பொருத்தமாயிருக்கும்.

முதலில் உடலழகு அமைந்ததே அடிகளின் நலத்தைப் புலப்படுத்தும்; உண்மையுணர்வின் நலம், புறத்திலும் அழகு கூட்டிவிட்டது. அடிகளார் நெடிய திருவுருவும், அதற்கேற்ற

ஒல்லியான, ஆயினும் தசைப் பிடிப்பான, திருவடிவும், செந்தாமரை ஒத்த மென்மையும், செந்நிறமும், ஒளியுங் கூடிய பேரழகுத் திருக்கோலம் உடையவர்கள்; அவர்கள் அணிந்திருந்த காவியாடை அவர்கள் அழகை மிகப் பெருக்கிக் கொண்டு பொருத்தமாய் விளங்கியது.

2. அழகு கெழுமிய நல்லுடல் அமைந்த அடிகளுக்கு உயர் வகையான கல்விப் புலமையும் பெருமிதங் கொள்ளும் வகையில் அமைந்துவிட்டது. மதிப்பு உடலால் மட்டுமன்றிப் புலமையாலும் பெருகியது.

3. கற்றது உணர விரித்துரைக்கும் நறுமணம் வேறு, அவர்கள்பாற் சிறந்திருந்தது; இதனால் அவர்கள் கல்வி, மணங் கமழுங் கல்வியாயிற்று.

4. அங்ஙனம் விரித்துணர்த்துதற் கேற்றபடி, குயில் போன்ற குரலினிமையும் மிக வியக்கத் தக்க வகையாய் இனிதமைந்துவிட்டது.

5. இவ் வகைகளோடு சிறந்த எழுத்தாற்றலும் நன்கு பொருந்தி, இறும்பூது பயப்பதாயிற்று.

6. எவ்வளவுதான் நலங்கள் கூடியிருந்தாலும், "நுண் மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம், மண்மாண் புனைபாவை யற்று" என்று திருவள்ளுவர் கூறுதல்போல வீணாகி விடாதபடி, மிகச் சிறந்த நுண்ணறிவும் நுண்ணுணர்வும் அடிகளுக்கு அமைந்தது தமிழகத்தின் நற்பேறு.

7. இவ்வளவோ, இவற்றுடன் சமய உணர்வும் தெளிவும் பழக்கமும் வாழ்க்கையும், இயல்பாகவே, செறிப்பாய் அழுத்தமாய், இடையீடுகளால் நிலைகலங்காத நிலையில் வீறுற்றன. மெய்ப்பொருள் அமையாத நிலையில் எந்தக் கல்வியும் கலையும் நூலும் பேச்சும் பயனற்றனவாதலின், இவ்வமைப்பே அடிகளார் மூலம் நன்கு விளங்கி நாட்டின் ஒவ்வொரு பகுதிக்கும் நடைமுறையில் உதவியாயிருந்தது. இதனால், வெற்றாரவாரங்கள் அடிகளார் நிலையில் இல்லை.

8. உரைநடை, செய்யுட் சிறப்பு, புதுக் கதை, நாடகக் கவின், மொழி பெயர்ப்பு, மறுப்பழகு, பதிப்பு நலன் முதலிய எத்தனையோ வகையான கலையாற்றல்கள் ஒருங்கமைந்து நாட்டவரைக் கவர்ந்து வந்தன.

9. 'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் அருளுள்ளம் அடிகளிடம் நாளும் விளங்கியது.

10. சைவ சித்தாந்த மகா சமாசம், சைவசித்தாந்தக் கழகம், தமிழகத்தில் எத்தனையோ சமய சங்கங்கள், ஞான சாகரம் முதலிய இதழ்கள் பொதுநிலைக் கழகம், மணிமொழி நூல் நிலையம், அம்பலவாணர் திருக்கோயில், மாணவர் சூழல், அன்பர் திரள், அடியார் திருக்கூட்டம், தல யாத்திரை முதலிய பலவும் திருத்தொண்டுகளாய் நிகழ்ந்தன.

11. எல்லாம் இங்ஙனம் ஒருங்கமைந்த இழைவில், அடிகளார் திருத்தோற்றம் இனிதெழுந்து திகழ்ந்தமை ஒரு பெரும் இறும்பூது ! இவற்றோடு, ஆராய்ச்சித் திறமும் அடிகளார் வாழ்விற் பெருஞ் சிறப்புற்றமை விந்தையினும் விந்தை! இது கிடைத்தற்கரிய பெருஞ் செல்வம், கருவிற் றிருவுடைய பெருமானுதலின், ஆராய்ச்சித் திறம் (Critical Study) எல்லாவற்றிற்கும் மாண்பு செய்து உலகுக்கு உதவுவதில் இணையற்றதாய்ப் பொலிவெய்தியது; எடுத்துத் தோன்றியது.

பெரும் பயன் :

அடிகளார் ஆராய்ச்சிகளால் மாண்புறாத துறைகளே இல்லை; உலகியற்கைகளே இல்லை; மனித குலங்களே இல்லை; காலப் பகுதிகளே இல்லை; நூலருமைகள் இல்லை; பொதுத் தொண்டுகளே இல்லை; தலைமை அழகுகளே இல்லை.

தமிழ்மொழி, மட்டுமா அடிகளார் ஆராய்ச்சிகளால் சீருற்றன? இந்திய மொழிகளும் உலகமொழிகளுங்கூட ஏற்ற விளக்கங்கள் பெற்றன; பெருமை பிறங்கின.

சைவ சமயமோ, அடிகளார் ஆராய்ச்சிகளால் மிகவும் செழுமை மேவியது. இந்து சமயங்களும் உலகவர் சமயங்களும் அவ்வவர் பொருளாய் வளங் கண்டதோடு, சிவநெறி என்பது வேறுங் குறியதாய் விளக்கமுற்றது.

தமிழக நாகரிகம் என்பது, அடிகளார் ஆராய்ச்சிகளால் பேரொளி பெற்றுவிட்டது. இந்திய நாகரிகமும் உலக நாடுகளின் நாகரிகங்களுங்கூட ஒளிபெற்றுச் சிறந்தன.

தமிழ்மொழி நூல்களில் அடிகள் ஆராய்ச்சிகளுக்கு உட்படாத, தக்க பழைய புதிய நூல்கள் உண்டா? அவற்றின் கால நிலைகள், வரலாறுகள், கருத்தழகுகள், ஆசிரியர் திறங்கள், இலக்கிய இலக்கண அளவை மரபுகள், மொழி நடைகள் முதலிய எவைதாம் அடிகளார் ஆராய்ச்சிகளில் ஒளி தீட்டப் படாதவை? கல்வெட்டுத் திறங்கள், புதை பொருட் பெருமைகள், விஞ்ஞானச் செழுமைகள், புதுக் கண்டு பிடிப்புகள், முற்கால பிற்கால இக்கால இயக்கங்கள் முதலிய பலவற்றிலும், இவ் வகையில் விடு

பட்டுப் போனவை எவை? இப்படியும் ஒரு பெருங்குரவர் திருவுருவம் நம் கண்ணெதிரில் தமிழகத்தில் நடமாடியதே.

முறைகள் :

ஆராய்ச்சித் திறம் பற்றிய முறைகள் எத்தனையோ உள்ளன; அடிகளார் கையாண்ட வகைகளும் பல வகை; முதலில், முறைகளைக் காண்போம்.

1. இயற்கை நெறி, 2. நூல் நெறி, 3. உலக நெறி, 4. மேற்கோள் நெறி, 5. மரபு முறை, 6. வரலாற்று முறை, 7. இலக்கிய நிலை, 8. இலக்கண வகை, 9. அளவை முறை, 10. ஒப்பு நோக்கு, 11. நாகரிக நெறி, 12. பாகுபாட்டு வகை, 13. சொன் முறை, 14. சொற்பிறப்பு முறை, 15. எழுது முறை, 16. ஓது முறை, 17. நூலாசிரியர் கருத்தறியு முறை 18. புதுக்கு முறை, 19. பலமுக ஆராய்ச்சி, 20. துருவி ஆயுமுறை, 21. ஆழ்ந்து செல்லு முறை, 22. இரண்டிலொன்று துணியு முறை, 23. பகுத்தறியு முறை, 24. முரண் அவிழ்க்கு முறை, 25. விளக்கு முறை, 26. வேறு படுத்து முறை, 27. அறிவியல் முறை 28. சமய வகை, 29. இணக்க முறை, 30. துணிவு நிலை, 31. நிலைப்படுத்து முறை, 32. நடுநிலைப் பாங்கு, 33. பயன் படு முறை, 34. இயைபு நெறி, 35. வினவு முறை, 36. விடை காணு நெறி, 37. வழூஉ முறை, 38. ஒதுக்கு முறை, 39. அற நெறி, 40. வாய்பாட்டுவகை, 41. கோட்பாட்டுவகை, 42. திட்டப் படுத்து முறை, 43. காரிய காரண முறை, 44. சுவை முறை, 45. நுண் முறை, 46. பொருட் பேறுகள், 47. இன்றியமையாச் சிறப்புகள், 48. குணப் பொருள் நெறி, 49. வாக்கு வகை, 50. சொற் பொருள் வரம்பு நிலை, 51. இனங்காணு முறை, 52. தொடுக்கு முறை, 53. விடுக்கு முறை, 54, உண்மை நோக்கு, 55. தொழில் முறை, 56. விரிப்பு முறை. 57. பரவை வழக்கு, அருகிய வழக்கு, உள் வழக்கு, இல் வழக்கு, பொதுவழக்கு முதலிய வழக்கு நெறிகள், 58. பொதுமைமுறை, 59. முன்பின் ஆயு முறை, 60. கற்பனை முறை, 61. செயற்கை முறை, 62. இறை முறை முதலிய எத்தனையோ வகையான ஆராய்ச்சி முறைகளை அடிகள் மேற்கொண்டிருக்கிறார்கள். இவற்றிற் கெல்லாம் சான்றுகள் எடுத்துக் காட்டப் புகின் மிக விரியும்.

சொந்தத்தில் :

அடிகள் இம் முறைமைகள் பலவற்றை மேற்கொண்டதோடு, தமது சொந்த ஆராய்ச்சியில் கையாண்டு கண்ட

கருத்துக்களும் பலப்பல, அவர்கள் நூல்களில் அங்கங்குங் காணப்படுகின்றன; சில காட்டலாம்.

"நம் ஆராய்ச்சியிலும் அஃதேற்புடைத்தாமாறு சிறிது காட்டுதும்''

'முதற்குறள் வாத நிராகரணம்' பக். 19

''யாம் அவற்றின் உண்மைத் தன்மை கூறியதே யன்றிப் பிறிதில்லை''

பண்டைத் காலத் தமிழரும் ஆரியரும், பக். 45

''நாகரிக மக்களிடத்து நடைபெறும் மொழிகள் விரைவில் வேறுபடுதல் இல்லை...ஒரு மொழி உருவந் திரிபடையாது நிலை நிற்றற்கு வேண்டும் முயற்சி என்னை என்று ஆயும்வழி, அதன் கண் ஒவ்வொரு சொல்லும் பண்டுதொட்டு வழங்குமாறும், அச் சொற்கள் தோன்றுங்காற் பெற்ற காரணமும், அவை வாக் கியங்களில் தொடர்புற்று நின்று பொருள் அறிவிக்குமாறும், அவற்ரேடு கலந்து வழங்கும் பிறமொழிச் சொற்கள் இவை யென்றதும் இனிது அறியப்பட்டு வருதலேயாம்.''

பண்டைக் காலத்...பக். 16

''இரண்டாயிர ஆண்டுகளுக்கு முற்பட்டு இடிந்து வெறும் பாழாய்க் கிடக்குங் கால அரண்மனை வாயிலை அணுகி உட் செல்ல நோக்குகையில், அங்கு மிகப் பரவித் தோன்றும் இருள், கரிய மைச்சேறு குழைத்த குழம்புபோல் மிகத் திணிந்து காணப்படுவதாயிற்று; அதனைக் காண்டலும் எம் உள்ளம் பெரிதும் புழுக்கமுற்று,

'ஆ, இக் கால அரண்மனையினுள்ளே பண்டைக் காலத்து எம் முதுமக்கள் தொகுத்து வைத்த களஞ்சியங்கள் எத்தகை யனவோ? அவற்றை எங் கண்ணுரக் காணவும் பெறுகின்றிலமே! அவற்றின் அருமை பெருமைகளை எங்ஙனம் உணர்வேம்?;

''என்று நினைந்து நினைந்து ஊடுருவிச் செல்லுதற்கு அரிதாம் அவ்விருளை நோக்கிய வண்ணமே மிக வருந்தி நின்றேம்; அங்ஙனம் நிற்பேமுக்கு எதிரில், விரிந்த அவ்விருளின் நடுவிலே, மன வலிமையும் விடா முயற்சியும் ஆழ்ந்த அறிவுமுடைய சிலர் அஞ்சா நெஞ்சினராய் இயங்கும் அரவம் செவிப் புலனுயிற்று.

''கதுமென அப் பக்கமாய் உறுத்து நோக்க, அவர் அங்கே, புற்று மூடிய சரக்கறையினைத் திறம்படப் பிரித்து, அதனுள்ளிருந்த பொற்பேழையினை உடைத்து, அதனுள் ளிருந்த முழு மாணிக்க மணிகள் சிலவற்றைப் புறத்தே எடுத்து வைத்தனர். உடனே அக் கால அரணில் விரிந்த இருள்வலி சுருங்குவதாயிற்று.

"அது கண்டு கரை கடந்த உவகை உடையேமாய் உள் நுழைந்து அவற்றினருகே சென்று விழைந்து நோக்க, அவ் வரிய பெரிய முழு மாணிக்க மணிகள் 'தொல்காப்பியம்' 'திருக் குறள்', 'இருக்குவேதம்', 'திரிபிடகம்' முதலியனவாய் இனிது விளங்கின.

"பின் இவ் வருமருந்தன்ன நூல் விளக்கத்தினாலே அப் பண்டைக் கால அரண்மனையுட் சிறந்த இடங்கள் பலவும் கண்டு வியப்பேமாயினேம்."*

பண்டைக் காலத்...பக். 34

"தமிழின் வரலாறும் அதன் வழக்கும் (ஆங்கிலம் பயிலு கிறவர்கள்) எவ்வளவு ஆராய்ந்திருக்கின்றார்கள் என்பது, அவர்கள் சொற்களிலிருந்து விளங்கவில்லை; ஆனாலும், எமக்குத் தெரிந்த மட்டில் எழுதுகின்றேம்."†

உரைமணிக் கோவை, பக். 64

'இங்ஙனமே 'புராணங்க'ளின் ஆராய்ச்சியும், 'பெரிய புராணச்' சிறப்பும் பற்றி வரும் அடிகளாரின் சொந்த ஆய்வுத் திறங்கள் பலப்பல. (உரைமணிக். பக். 143-9; 150-1; கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் சைவமாகா, பக். 64-112)

முடிபுகள் :

அடிகள் அவ்வப்போதும் செய்த மிக வலிமையான, மிக ஆழமான, மிக உழைப்பான அறிவார்ந்த ஆராய்ச்சிகளால் எத்தனையோ கருத்துக்கள் தக்க சான்றுகளுடன் தமிழகத் துக்குக் கிடைத்திருக்கின்றன. அவற்றிற்கு ஓர் அளவே இல்லை.

தமிழகம் அடிகளாரை இப்போது இழந்து நிற்கிறதே! இதுவன்றோ உண்மையான கையறவு! கடமைகள் இன்னவை என்று அறியாமையாலும், கருத்து வேறுபாடுகளாலும், பின் பற்ற மாட்டாமையாலும், அடிகளை மிகு விரைவில் இழந்து விட்ட தமிழகம், இனிச் செய்வதற்கு என்ன இருக்கின்றது!

---

*இந்தப் பகுதியினால், அடிகளார் கையாண்ட 'கற்பனை முறை' 'ஆராய்ச்சி வேட்கை' புலப்படுகின்றன. திருக்குறள் தொல்காப்பிய மாகிய தமிழ் நூல்களோடு, 'இருக்கு வேதம்', 'திரிபிடகம்' என்பன வும் எடுத்துக் காட்டலால் 'நடு நிலைமை' 'பொது முறை' 'ஒப்பு நோக்கு' 'வரலாற்று நெறி' முதலிய ஆராய்ச்சி முறைகள் பலவும் விளங்கும்; இவை, சான்றுகளாகவும் உதவுதல் கண்டுகொள்ளப்படும்.

†இப் பகுதி, வரலாற்றாராய்ச்சி, வழக்கு நிலை, உண்மை காணு முறை, இடர்ப்பாடுகளில் நழுவி விடாமை, அடிகளின் தன்னடக்கம் முதலியவற்றைத் தெளிவிக்கும்.

தமிழகத்தின் புறக்கணிப்பும், கருத்தில்லாப் புல்லறிவாண்மை யும், அடிகள் நெடுநாள் இத் தமிழ்ப் பகுதியில் உலவாமற் செய்துவிட்டன; இப் புறக்கணிப்புக் கேற்பப் 'போதும்' என்று இறைவனுங் கருதிவிட்டனன்போலும்! தமிழகத்தின் இழப்பு, ஐயகோ, பெரிது, பெரிது!

ஆராய்ச்சியால் விளங்கிய உண்மைகள், எவ்வளவு பெரும் புதையலாய் இருக்கின்றன! நடுநிலைமைக்கும் உண்மைக்கும் நேர்மைக்கும் இனி எங்கே போவது! சில எடுத்துக் காட்டுகளே இங்கே காணமுடியும்.

அடிகளார் நூல்கள் எழுத்தெண்ணிப் பயில்வதற்குரியன; அதற்கேற்றபடி, அந் நூல்களைப் பதிப்பிடும் கழகத்தார், பிறர், எல்லாரும், பக்கந்தோறும் உரிய அடிக்குறிப்புக்கள் பதித்தும், சில சந்திகள் பிரித்தும், உள் தலைப்புக்கள் இட்டும், சுவை முறைகள் குறித்தும், பொருட்பேறுள்ள இடங்களைப் பெரிய எழுத்துக்களில் அமைத்தும், சில தொடர் களுக்கிடையே பகுதிகள் (பாரா) வகுத்தும், குறியீடுகள் கொடுத்தும், செய்யுள் நூல்களைப் போலவும், ஆங்கிலம் முதலிய அயல் மொழிப் பதிப்புக்கள் போலவும், அடிகள் நோக் கங்களைத் தமிழகமும் உலகமும் தழீஇப் பயன் கொள்ளுமாறு அச்சிட்டுப் பரப்புதல் நன்று!

மாணவர் முதலில் மாண்புறுவர்; புலவர்கள் மேன்மேற் புலமை பெறுவர். ஆராய்ச்சியறிஞர் வைப்பெனும்படி குறிப்புகள் பல அடைவர். பொது மக்களும் நலமெய்துவர்; சிறப்பு மக்க ளாகிய சான்றோர், தகுவன பரவச் செய்து கடமைகள் ஆற்றுவர்; எல்லாம் வல்ல இறைவனும், தம் நோக்கங்கள் நிறைவேறிவருத லறிந்து திருவுளம் நிறைவர்.

உண்மைகள் சில வருமாறு.

## 1. உரை முறை

"ஆசிரியர் நச்சினார்க்கினியர் பொருள் நுட்பங் கண்டுபிடிப் பதில் மிக வல்லுநர்".

*முதற்குறள் வாத நிராகரணம், பக். 5*

"இளம்பூரணர், சேனாவரையர், பரிமேலழகியார் என்னும் உரைகாரர் மூவரும் சொற் பொருள் திட்ப நுட்பங்கள் செறிந்த உரைகள் எழுதுதற்கண் வல்லுநர்."

*மாணிக்கவாசகர் வரலாறுங்,காலமும், பக். 452*

"சூத்திரங்களின்" சொற்பொருளை விடாமல் அவற்றைக் கௌவிக்கொண்டே சென்று பேருரை விரிப்பார் ஆசிரியர் நக்கீரனார்.

"நக்கீரனரது உரை...... நெகிழவேண்டும் பதத்து நெகிழ்ந்தும், இறுகவேண்டும் பதத்து இறுகியும், நல்லிசைப் புலமை மலிந்த செய்யுட்போல், நகை, அழுகை, இழிவு, வியப்பு, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்னும் எண்வகை மெய்ப்பாடும் தோற்றுவிக்கும்.

"தருக்க இயைபும் சொற்பொருளடுக்கும் உடைத்தாய்ப், பாச் சுவை விராவிய உலக நடைத்தாய்ப் பண்டைக் காலச் செந்தமிழ் வளந் துறுமி, அகன்று ஆழ்ந்து தெளிந்து நிற்றல் காண்க.

"எவராலும் ஆக்குதற்கேலாத...உரை :

"செய்யுட் சுவை தோய்ந்த உரைநடை, இளம்பூரணர், பேராசிரியர், சேனுவரையர், அடியார்க்கு நல்லார், பரிமே லழகியார், நச்சினர்க்கினியர் முதலான வேறு உரைகாரர் தம் உரைகளுள் யாண்டுங் காணப்படா.

"பிற்காலத்திருந்த சிவஞான முனிவரருங்கூட நக்கீரனருக்கு ஈடாகார்."

"இறையனரகப் பொரு ளுரையினை இயற்றிய ஆசிரியரின் புலமைத்திறம் பெருமாட்சித்து."

*மாணிக்கவாசகர் வரலாறுங். 452, 453, 457, 460*

### ii. திட்டங்கள்

"முல்லைப் பாட்டின் பகுதி பதினெட்டடிகளில் உள்ள நூறு சொற்களில், தொண்ணூற்றெட்டுச், செந்தமிழ்ச் சொற்கள்".

"திருவாசகம் முழுதும் உள்ள சொற்களை எண்ணிப் பார்க்க, முதன்மையாயுள்ளன இரண்டாயிரத்து எண்ணூற்றுப் பத்துச் சொற்களே; எண்ணூற்றுப் பதினெட்டுச் செய்யுட்கள், திருவாசகத்தின்கண் உள்ளன.

*மாணிக்கவாசகர் வர. பக். 47, 51*

### iii. மொழித் திறன்

"தமிழ் மொழி தனிமொழி;

"தமிழ் 'திரமிளத்'தின் திரிபாயின், 'தமிழ்' இனிமை எனப் பொருள்படுவது போலத் 'திரமிள'மும் இனிமையெனப் பொருள் படல் வேண்டும்.

"சங்கச் செய்யுட்களிலும் தொல்காப்பியம் முதலிய பேரிலக் கணங்களிலும் வட சொல்லே விரவாதிருத்தல்"

"சில தமிழ்ச் சொற்களை வடசொற்களாகக் கூறுவார் விரகும், தமிழினின்று பல தமிழ்ச் சொற்கள் வடமொழியில் வழங்கப் பெறுவதும் விரிப்பாம்"

"முன், இமயவரை தொட்டுக் குமரியாறு காறும் வழங்கியது தமிழே"

"அகரம் எழுத்துகட்கு நிமித்த காரணம்"

முதற்குறள் வாத. *15, 16, 18, 38*

"சமக்கிருதத்துக்குத் தாய்மொழி ஆரியம்"

பண்டைக் காலத். *14*

"தொல்காப்பியம் பஃறுளியாறு கடல் கொள்ளப்படுமுன் எழுதப்பட்டது"

பண்டைக் காலத். பக். *22*

"இலக்கண ஆராய்ச்சிக்கு இன்றியமையாப் பெருஞ் சிறப்பினது....சொல் வரலாற்று முறை"

பண்டைக் காலத். பக். *22*

"வடநாட்டிலிருப்பார் பெரும்பாலார் பண்டைக்காலத் தமிழ் மரபினரே"

பண்டைக் காலத். பக். *49*

"கவுதம சாக்கியர் தமிழரே"

பண்டைக் காலத். பக். *54*

"'சூத்திரம்' என்பது தனித் தமிழ்ச் சொல்'

உரைமணிக். பக். *53*

"கி. பி. மூன்ரும் நூற்ருண்டிற்குப் பின்னெழுந்தது சமக்கிருத மொழி"

உரைமணிக். பக். *153*

"சமக்கிருதம் தோற்றியவர் ஆருகதர்"

உரைமணிக். பக். *134*

## iv. சமயத் திறம்

"மாயாவாதியர் அஃகியறியும் ஆற்றலில்லார்;...பொருந்தா இயைபுகள் காணுதற்கண் மாயாவாதியர் மிக வல்லுநர்"

முதற்குறள் வாத. *41*

"பழ விணக்கே முதன்மை சொல்லுவர் மீமாம்சகர்"

"மக்கள் தமது நன்முயற்சியால் ஊழையும் புறங்காண்பர் என்பதே சைவ சித்தாந்திகள் கோட்பாடு"

''இருக்கு முதலிய வட நூல்களில் பிரகிருதிக்கு மேற்பட்ட 12 தத்துவங்கள் கூறப்பட்டிருக்கின்றனவா?''

''திருநீறும் உருத்திராக்கமும் சிவபிரான் திருக்கோயில்களும் 'இருக்கு' 'யசுர்' முதலிய நூல்களிற் சொல்லப்பட்டிருக்கின்றனவா?

தலைமையுரைமேல்-தடைகளுக்கு விடை, பக். 18, 78

''எத்தகைய முயற்சியைச் செய்தாலும் முழுமுதற் கடவுள் உணர்ச்சியோடு அதனைச் செய்தல்''

''ஆராய்தலாலும்...பேசுதலாலுமே...பேரின்பப் பேற்றை அடைதல் இயலாது;...நெஞ்சம் நெக்கு நெக்குருகுதலால் மட்டுமே...திருவருட் பேற்றிற்கு உரியராகலாம்''

பொதுநிலைக் கழகம், பக். 7, 15

### V. பொது

''தருக்க முறையும் ஆராய்ச்சி முறையும்...நன்கறிய மாட்டாத தடைகள் பிழைபாடுடையன''

தலைமையுரை மேல். 80

''மொழி காலவேறுபாட்டால் வேறுபடினும் மக்கள் சாதிப் பிறப்பு யாண்டும் ஒரு தன்மையாகவே இருக்கும்''

பண்டைக் காலத். பக். 49

வரலாற் றாராய்ச்சி :

ஆராய்ச்சி, முக்கியமாக 'இயற்கை யாராய்ச்சி' எனவும், 'நூலாராய்ச்சி' எனவும் இருவகையிற் பாகுபடும்; நூலாராய்ச்சியில் வரலாற்றாராய்ச்சி அடிப்படையானது; நூலாசிரியர்கள், அவர் நூல்கள் எழுந்த காலங்கள், திட்டப்பட்ட பின்பே, நூல்களின் ஏனை எல்லா ஆராய்ச்சிகளும் ஒழுங்குபடும்; அடிகளார் காலத்தில், பெரும்பாலான தமிழ்ப் புலவர்கள் இவ்வியல்பிற் கருத்தில்லாதவர்கள்; சமய நூல்களின் முறை பிறழ்ந்த செல்வாக்கு, இதனை ஓரளவு மறைத்துவிட்டது. சமய நூல்களையும் சமய நூலாசிரியர்களையும் நன்கு கவனிப்பவர் ஆசிரியர் மறைமலையடிகளார்; பலர்க்கு இதனால் அடிக்கடி கருத்து வேறுபாடுகள் அங்கங்கும் எழுந்தன; இந்நிலை அடிகளாரை மேன்மேலும் உரம்பெறச் செய்தனவே யன்றி வேறில்லை; ''மாணிக்க வாசகர் வரலாறுங் காலமும்' என்னும் மாப்பெரும் செந்தமிழ் ஆராய்ச்சி நூல் இதனால் உருவாயிற்று.

'வரலாறு' என்பதே கால நிலையின் முதன்மையுடையது தான்; இப் பெருநூலில், எல்லாச் சிறப்பு நூல்களுக்கும் காலம் திட்டம் செய்துகொள்ளப்பட்டது. அரசர்கள் ஆசிரியர்கட்கும்

காலத் திட்டம் ஒழுங்கு செய்யப்பட்டன. தமிழகத்துக்கு இந் நன்முயற்சியைத், தம் மாட்சி சிறந்த ஆராய்ச்சித் திறனால், அடிகளார், ஓர் அருட்கொடையாகவே வழங்கியிருக்கின்றனர்;

அந் நூலில் வரும் ஆராய்ச்சி முறைகளையும், முடிபுகளையும் முற்றும் இங்கே விளக்கமுடியாவிட்டாலும், அதில் முடித்துக் கூறப்பட்ட கருத்துக்களை மட்டுமாவது, தொகுத்துரைப்பது நன்றாகவே யிருக்கும்; தமிழகம் எளிதில் அறிந்து பயனடைய லாம்; ஆயினும், அந் நூலின் பொருளடக்கப் பகுதி கண்டு, நூலுள் நுழைந்து, விளக்கங்கள் பெற வாய்ப்புள்ளது; சில குறிப்புக்கள் மட்டும் இங்குங் கொடுத்துச் செல்லலாம்.

### i. மாணிக்கவாசகர் வரலாறு

1. மாணிக்கவாசகர், சென்ற காலத்தில் திருப்பெருந் துறையில் கோயில் இல்லை; மூவர் காலத்திலும் இல்லை.

2. திருப்பெருந்துறையில் எழுந்தருளிய குரு, மாணிக்க வாசகர்க்கு அறிவித்தது 'சிவஞான போதம்' அன்று; திருவைந் தெழுத்து.

3. மாணிக்கவாசகர்க்கு மனைவியார் இருந்தார்.

4. நரி பரி யாக்கிய திருவிளையாடல் மாணிக்கவாசகர் பொருட்டே நிகழ்ந்தது.

5. சோதி (ஒளி) வடிவிலேயே அடிகளுக்கு இறைவன் எங்கும் வெளிப்பட்டுக் காட்சி நல்கினர்; திருப்பெருந்துறை, திருவுத்தரகோச மங்கை, திருக்கழுக்குன்றம் என்னுந் தலங் களில் அடிகள் கண்டது ஒளி வடிவே.

6. எதிர்த்துப் பேசிய புத்த குருவை ஊமையாக்கி, எழி லுரை நல்கிய இலங்கை மன்னன் புதல்வியை, அவர், ஊமை நீக்கினர்.

7. சைவ சமய முதலாசிரியர் திருவள்ளுவர் முதலியோர்.

8. சைவ சமயாசிரியர் கூறிய(து) தமிழ் நான்மறை.

9. கவுதம சாக்கியராகிய தம் முதலாசிரியர்க்கு மாருய்ப், பின் வந்த புத்த குருக்கள் கொள்கைகள் வகுத்தனர்.

10. மாணிக்கவாசகரால் மறுக்கப்பட்ட பவுத்தம், பழைய 'சௌத்திராந்திகம்' என்னும் ஈனயானம்.

11. எல்லா மக்கட்கும் உடம்பாடான கொள்கைகள் மேல் சமய உண்மைகள் நிற்கவேண்டும்.

## ii. மாணிக்கவாசகர் காலம்

1. 'திருச்சிற்றம்பலக் கோவை' கூறும் வரகுணன் வேறு; அவன், அடிகளார் காலத்தவன்; கல்வெட்டுக்களிற் குறிக்கப் பட்ட வரகுண பாண்டியர் இருவர்; இவர்கள் இருவரும் 8 ஆம் நூற்றுண்டுக்குப் பிற்பட்டவர்.

2. கல்வெட்டுக்களிற் காணப்படும் கரிகாற்சோழர் மூவர்.

3. வடுகக் கருநாடர் வேங்கட மலைக்கு வடக்கேயிருந்து வந்தவர்.

4. 'கல்லாட' நூலின் காலம் 5 ஆம் நூற்றுண்டின் இறுதி.

5. இறைவன் திருவடிச் சிலம்பொலி கேட்ட சேரமான் வேறு, சேரமான் பெருமாள் வேறு.

6. திருஞானசம்பந்தர் குறித்த பாணரே, பாணபத்திரர். திருநீலகண்ட யாழ்ப்பாணர் இவரின் வேறு; பாணபத்திரர், மாணிக்கவாசகர் காலத்துக்கு முற்பட்டவர்.

7. நக்கீரர், இடைக்காடர், சிவனடியார்கள்.

8. தமிழுக்குப் பழைமையானது அகவற் பா; கட்டளைக் கலித்துறை, கலி விருத்தம், ஆசிரிய விருத்தம் முதலியன புதுப் பாக்கள்; கி. பி. 3 ஆம் நூற்றுண்டுக்கும் கி. பி. 6 ஆம் நூற்றுண்டுக்கும் இடையில் இவை விரவின.

9. 'திருக்கோவையார்' பழைய தமிழ் வழக்கைத் தழுவிய தென்பதை நிலைநாட்டவே 'கல்லாடம்' யாக்கப்பட்டது.

10. கட்டளைக் கலித்துறை தேவாரத்தில் விருத்தம் என வழங்கப்பட்டது; 3ஆம் நூற்றுண்டில் புதிது புகுந்தது.

11. திருக் கண்ணப்பதேவர் திருமறம் 11ஆம் நூற்றுண் டிற்கு முற்படுதல்.

12. பண்டிருந்தது, மறவர்க்கு மட்டும் கல்நாட்டும் பழக்கம்; அரசர் கல்வெட்டன்று.

13. பல்லவராட்சிக்கு முன் கல்வெட்டுக்கள் இல்லை; முன் தமிழ் வேந்தர் வரலாறுகள் பழைய தனித்தமிழ் நூல்களால் அறியப்படும்.

14. பல்லவரும் ஆந்திரரும் உறவினர்; இவரோடு சாளுக் கியரும் வேளாளரே; சோழன் வழியினரே பல்லவர்.

15. வடுகர் தமிழ் நாட்டிற் புகுந்தபின், தமிழ் மன்னர் வலி சுருங்கினர்.

16. கண்ணகி சீற்றத்தால், சோழ பாண்டிய நாடுகள் சீர் குலைந்தன.

17. சேரமான் பெருமாள் காலம் 8 ஆம் நூற்றுண்டு; காரைக்காலம்மையார் காலம் 4 ஆம் நூற்றுண்டு.

18. புத்தமதம் தமிழ்நாட்டில் தலையெடுத்ததும் ஒடுங்கியதும் கி. பி. 2ஆம் 6ஆம் நூற்றுண்டுகளுக்கிடையில்.

19. மாணிக்கவாசகர் நூல்களில் சமணசமயக் குறிப்பில்லை; பல்லவ அரசரைப் பற்றிக் குறிப்பில்லை.

20. மாயாவாதம் சங்கராசாரியார்க்கு முன்பே இருந்தது.

21. திருமந்திரத்தின் காலம் 6ஆம் நூற்றுண்டு; அந்த நூலில் 'மாயா வாதம்' குறிக்கப்படுகிறது.

22. 'அத்துவிதச்' சொல்லின் மெய்ப்பொருள் கண்டவர் மெய்கண்ட தேவர் ஒருவரே.

23. திருமந்திரம், பெரிய புராணம், இறையனுரகப் பொருளுரை என்பவற்றில் இடைச்செருகல் உண்டு.

24. 'காமிகம்' முதலியன, பழந்தமிழ்த் தச்சு நூல் மொழி பெயர்ப்பு.

25. பிரத்தியபிஞ்ஞைக்கு முதல் நூலாகிய சிவசூத்திரங்கள் தமிழ்ச் சிவாகமங்களில் தோன்றி வடக்கே சென்றன.

26. முழுமுதற் கடவுள் அம்மையப்பராய் நிற்றல்.

27. 'மந்திரம்' 'மாலை' என்பன தமிழ்ச் சொற்கள்.

28. உபமந்யு முனிவரைத் திருநாவுக்கரசர் குறிப்பிடுதலால், அவருட்பட்ட நாயன்மார் வரலாற்றைக் கூறும் 'உபமந்யு பக்த விலாசம்' அம் முனிவர் செய்ததாகாது.

29. அகநானூறு முதலிய சங்கச் செய்யுட் காலத்தில் 'அகத்தியர்' என ஒருவர் தமிழகத்தில் இல்லை; பிற்காலத்தில் அகத்தியர் பலர்.

30. மழைக் கடவுளாகிய இந்திரனே ராமன்; உழவு சால் சீதை; இவ்வாறு இருக்கு வேதத்தில் வந்தது.

31. கி. மு. முதல் நூற்றுண்டுக்கு முன் பழந்தமிழ்ப் பாட்டுக்களில் 'இராம இராவண'ரைப் பற்றிக் குறிப்பில்லை.

32. பெரும்பாலும், உள்ளது கூறுவது பாரதம்; இல்லது கூறுவது, இராமன் கதை; கண்ணபிரான், உண்மையாய் இருந்தவன்; இராமன் உண்மையில் இருந்தவனல்லன்; கி. பி.

7ஆம் நூற்றாண்டிற்குப் பின்பே இராம வணக்கம் உண்டாயிற்று.

33. பண்டைத் தமிழரது தெய்வக் கொள்கை, எல்லா மக்களாலுந் தழுவப்படும் பொதுக் கொள்கையே.

34. பொய்கையாழ்வார் பேயாழ்வார் இருவரும் பண்டைத் தமிழ்க் கொள்கையின் வழிப்பட்டவர்.

35. ஆண்டாள், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருமங்கை யாழ்வார், 10ஆம் நூற்றாண்டு; ஏனையாழ்வார் 8ஆம் நூற்றாண்டிற்குப் பின்.

36. முதலாழ்வார் மூவர் காலத்தில் திருமால் கோயில்கள் 20-க்கு மேல் இல்லை; திருமங்கையாழ்வார் காலத்தில் 85;

37. மாணிக்கவாசகர் குறித்த சிவபிரான் திருக்கோயில்கள் 54.

38. மாபாரதத்தின் பழம்பகுதியில் கண்ணன் குழவிக் கால ஆண்மைச் செயல்கள் இல்லை.

39. கபிலர் காலம் கி. பி. முதல் நூற்றாண்டின் முற்பகுதி; கபிலர் முதியராயிருந்த காலத்தில் பரணர் இளைஞர்; இக் கபிலர், தமிழரல்லர்.

40. சுந்தரமூர்த்தி நாயனார் கி, பி. 760-810 வரை 50 ஆண்டுகள் இருந்தவர்.

41. மூன்றாம் நந்திவர்ம பல்லவன் பாண்டிய சேர அரசர்களைப் போரில் வென்றான்; நந்திக் கலம்பகம் உடையான்.

42. சம்பந்தர் பதிகங்கள் மட்டுமே, பன்னீராழ்வார்கள் பதிகங்கள் அளவு உள்ளன;

43. திவாகர நிகண்டின் திட்டமான காலம், 10 ஆம் நூற்றாண்டு.

44. நாச்சியார், திருவாசகத்தை நன்கு பயின்றவர்.

45. 'களவழிப்' பொய்கையார், 'இன்னிலைப்' பொய்கையார், பொய்கை யாழ்வார் மூவரும் வேறு வேறு காலத்தவர். 'களவழிப்' பொய்கையார் ஏனை இருவர்க்கும் முற்பட்டவர். இன்னிலைப்' பொய்கையார் 2ஆம் நூற்றாண்டினர்.

46. ஆழ்வார்களெல்லாரும் சைவசமய ஆசிரியர்களின் தேவார திருவாசகங்களை நன்கு பயின்றவர்கள்.

47. உக்கிரப் பெருவழுதி என்னும் பாண்டி மன்னர் இருவர்.

48. கருநட அரசர் சமண மதத்தினர்.

49. மதுரைக் கடைச் சங்கம் இருந்தது, கி. பி. 2ஆம் நூற்றுண்டிற்கு முன்.

50. தமிழ் முச்சங்கமும் நடைபெற்ற மொத்தக் காலம் 3940 ஆண்டுகள்.

51. பரதர் என்பார் தமிழ் நாகரிக மக்கள்; அவர் ஆண்ட இந்நாடு 'பரத கண்டம்' எனப்பட்டது.

52. வசிட்டரின் மரபினர் ஆரியர், விசுவாமித்திரரின் மரபினர் தமிழர்; முன்னவர் சிவத்தை இகழ்பவர், பின்னவர் போற்றுபவர்.

53. தமிழந்தணர் முத்தீ வேள்வி வேட்டனர்; அவ் வேள்வி, உயிர்க் கொலை இல்லாதது!

54. விவிலிய ஆபிரகாம் நாயனுர் முதலானவர்கள் தமிழரே.

55. தமிழர்க்குத் தனியாக வேதமிருந்தமை பற்றி, 'ஐதரேய பிராமணம்' கூறியது.

56. மகாவீரரும் தமிழர்.

57. கி. மு. 2ஆம் நூற்றுண்டிலிருந்து கிரேக்கரிடத்தில் வான் நூலாராய்ச்சி தோன்றியது.

58. ஓரை, தமிழ்ச் சொல்.

59. பண்டைத் தமிழர் நாகரிகம், ஏட்டுச் சுவடியால் நடைபெற்றது.

60. வட்டெழுத்துக்கள் 6000 ஆண்டுகளாக வழங்குவன;

61. முரஞ்சியூர் முடிநாகராயர், முதுகுடுமிப் பெருவழுதி, நெட்டிமையார், நெடும்பல்லியத்தனுர், தலைச் சங்கத்தினர்; தொல்காப்பியம் இவர்க்கும் முற்பட்டது; அது, தலைச்சங்க காலத்து நூலே.

62. கபாடபுரம் என்பது திருச்சீரலைவாய்;

63. குமரி நாடு கடல் கொண்டது ஏறக்குறைய கி. மு. 2000 இல்.

64. நக்கீரனுர் காலம் கி. பி. முதல் நூற்றுண்டு.

65. எத்துணைப் பெரியாரும் பிழைபடுதல் இயல்பு.

66. சம்பந்தர் கி. பி. 630இல் அருளொளியிற் கலந்தார். அப்பர் அதற்கு 4 ஆண்டுகட்குமுன் அருளொளியிற் கலந்தவர்;

67. "நூலே கரகம் முக்கோல் மணையே" என்னுந் தொல்காப்பிய நூற்பாவில் நூல் என வந்தது பூணூலன்று, கலைநூல்; துறவிகட்குப் பூணூல் இல்லை.

68. கி. பி. 9 ஆம் நூற்றுண்டுக்கு முன் இருந்தவர் இளம் பூரணர்.

69. மாணிக்கவாசகர் காலத்தில் தில்லை நகர்க்கருகில் கடல் இருந்தது; திருஞானசம்பந்தர் காலத்தில் வற்றி எட்டிச் சென்றுவிட்டது.

70. அறுபத்து மூவரில் மாணிக்கவாசகராற் குறிக்கப் பட்டவர் இருவர்; அப்பர் சம்பந்தரால் பதினல்வர்.

71. சுத்த மாயையின் பெயராகிய 'மாமாயை'யும், 'ஆணவம்' என்னும் மூல மலப் பெயரும் மாணிக்கவாசகர் நூல் களில் வரவில்லை;

72. 'நம்பியாண்டார் நம்பிகள்', 'இராசராச அபயகுல சேகர சோழர்' காலம் கி.பி. 10 ஆம் நூற்றண்டின் இறுதியில்.

73. திருவாசகம் திருக்கோவையார் பழந்தமிழ் வழக் குடையன; தேவாரம் புதுத் தமிழ் வழக்கு.

74. கல்வெட்டுக்களில் திருவாதவூரடிகள் பெயர் காணப் படவில்லை.

75. பண்டு தொட்டே தில்லையம்பலம் பொற்றகடு வேயப் பட்டு வந்தது.

76. 'மற்ச புராணம்', 'வாயு புராணம்' பழைய புராணங்கள்; பின் வந்தவை, 'அக்நி புராணம்' முதலிய ஒன்பது புராணங்கள்; 'விஷ்ணு புராணம்' முதலியன 10 ஆம் நூற்றுண்டுக்குப் பின்; இவை பழைய பதினெண் புராணங் களிற் சேராதவை. பழைய புராணங்கள் கி. பி. 2 முதல் 6 ஆம் நூற்றுண்டுக்கு இடைப்பட்டவை. புராணங்களுக்கு முந்தியது, வான்மீகி இராமாயணம்.

சிந்தனைச் செல்வம் :

இத்தனை ஆராய்ச்சி முடிபுகளுக்கு அடிகள் எவ்வளவு சிறந்த ஆராய்ச்சியாளராய் இருந்திருக்கவேண்டும். சிந்தனைச் செல்வம் அடிகளுக்கு மிகுதி.

மனம் நினைக்கும்; சிந்திப்பது சித்தம்; துணிவது புத்தி; ஊக்கங் கொள்வது அகங்காரம்; அகங்கரிப்பது, அதாவது அகம் உறைப்புக் கொள்வது, ஊக்கத்துடன் முனைந்து நிற்ப

தாகும்; அகங்காரம் என்னுங் கருவி, நன்மையிற் செல்லும் போது நற்கருவியாய் நின்று உதவுகிறது. மனத்தின் பகுதி யாய்ச் சித்தம் சிந்திக்கும் என்பதை மாதவச் சிவஞான முனி வரும் தமது பேருரையில் (சிவஞான பாடியம், சூ. உ. அதி. உ. ஆங்கார தத்துவம்) நன்கு விளக்கினர். இங்ஙனம் நான்கு அந்தக் கரணங்களும் நன்கு மலர்ந்திருப்பவர்க்குப் புறக் கருத்துக்களை அகத்திற் கொண்டுபோய் ஆராய்ந்து முடிபு காண்பது நன்கு நிகழ்கிறது.

''சிந்தையீர், உமக்கொன்று சொல்லக் கேண்மின்'' என்றார் அப்பர்; மனிதரைச் 'சிந்தையீர்' என்றழைப்பதனால், ஆராய்ச்சி செய்யும் சிந்தனைச் செல்வம் மக்களுக்கு எவ்வளவு முக்கியம் என்பது சொல்லாமலே விளங்கும். சிந்திக்கும் சிறப்பு, மக்களை முன்னேற்றுகிறது; அந்தக் கரணங்கள் அத்தனை யையும் நன்கு மலர வைக்கிறது; வித்தைக் கருவிகள் விளக்கும் கலைத்திறனை மேம்படுத்துகிறது; தூய்மைச் செயல்களால் அமையும் அருட்கலை பெருகவும் உதவுகிறது. ஆராய்ச்சித் திறங்கள் மக்கட்கு இங்ஙனமெல்லாம் நன்மைகள் கூட்டு கின்றன!

அடிகளார் வாய்மொழிகள் சில :

1. ''அறிவைப் பண்படுத்து விளக்கமுறுவிக்க வேண்டு மென்னும் அவாவுடையாரெல்லார்க்கும் நூலாராய்ச்சி என்பது இன்றியமையாது வேண்டப்படும் தலைமையுடைத்து.

2. ''தாம் இன்புறுவது குறித்தாயினும் பொருளீட்டி....... வாழ்வது குறித்தாயினும் பல நூற் பொருளை உணர்ந்துசேறல் நூலாராய்சசி யாகாது.

3. ''புகழ்வேண்டுவார் நூற்பொரு ளாராய்ந்தா ரெனப் படார்.''

4. ''நடுநிலை திறம்பாது பல நூற்பொருளும் நுண்ணி தாக அளந்து ஆராய்ந்து உளங்கொளப் பயின்று புலமை நிரம்புதல்......பெறப்படும்.

5. ''ஒன்றேடொன்று தலைமயங்கிக் கிடக்கும் நூல் கலவையுள் நல்லன தெரிந்தெடுத்துக் கோடற்கும் அல்லன ஒழிதற்கும் உதவு(வது).

6. ''நூல்களில் நுட்பப் பொருள் தேர்ந்து தாம் இன்புறு தற்கும் பிறர் இன்புறு வகையான் அவர்க்கு இனிது விளக்கு தற்கும் சிறந்த கருவியுமாவது.

7. "நூலாராய்ச்சி செய்வாரும் வேறே, நூலறிவு கொள்வாரும் வேறே.

8. "நூலாராய்ச்சி செய்ய விரும்புவார்க்கெல்லாம் மிகுந்த நுட்பவுணர்வும், பரந்த நூலறிவும் உளவாதல் வேண்டும்;

9. "நுட்ப வுணர்வுதானும் ஒருவர்க்குப் பிறவியிலே இனிதமைவதன்றி இடையிலே அரும்பி மலர்வதன்று; ஒருவன் தன் தாயகட்டிற் கருக்கொண்டவாறே, அவனறிவில் தானுங் கருக்கொண்டு சிறிது முகிழ்த்துப் பின்னைப் பயிற்சி வயத்தானும் நூற் புலமையானும் முறுக்குடைந்து விரை பரப்பி விரிவது.

10. "இயற்கையிலே வாய்ப்பப் பெற்றாரன்றி ஏனையோர் அதனை அடைதுமென மேற்கொண்டு புகுதல் பெரிதும் இடர்ப் படுதற்கேதுவாம்.

11. "சொன்னோக்கம், பொருணோக்கம், அதனுரை நோக்கம், அவ்வுரையின் முன்பின் உள்ள இயைபு,......... இலக்கண நூற் கருத்து, முதலிய(ன)......கண்டு (தேறுதல் வேண்டும்).

12. "புடைபட ஒற்றி அளந்தாராய வல்லார்க்கு விளங்கும்.
காஞ்சியாக்கம், பக். 11, 12, 31, 32.

13. பொதுமக்களின் நன்மையையும் முன்னேற்றத்தையும் கருதும் நல்லறிஞர்கள்,......இவ்வாறு கொள்ளத் தகுவன தள்ளத் தகுவன இவ்விவை என்பதைப் பொதுமக்களுக்கு நன்கு எடுத்துக்காட்டி,......தமக்கும் பிறர்க்கும் பயன்பட ஒழுகுதல், இஞ்ஞான்று இன்றியமையாது செயற்பாலது.

14. மெய் வரலாறுகளினாலேதான் ஐயுறவுக்குச் சிறிதும் இடனின்றி நன்கு தெளிய (முடியும்).

15. தக்க சான்றுகளில்லாமையால்......வெறுங் கதைகளாகவே இருக்கின்றன.

16. "நூலாராய்ச்சி என்பது இவ்வாறெல்லாம் அமைந்து கிடப்பது".

கடவுள் நிலைக்கு மாறான, பக். 66, 42.

அடிகளார் தமிழகத்தில் மிகப் பெரிய ஆராய்ச்சியாளர்; தமிழகம் அவர்களை இழந்து தவிக்கிறது. எல்லாம் வல்ல திருவருளே தமிழ் மக்களின் குறை அறிந்து உதவவேண்டும். பன்மொழிப் புலமையும், பன்னூற் பரப்பறிவும், மிக நுண்ணிய இயற்கையுணர்வும், மெய்ப்பொருள் வாழ்க்கையும், ஆசிரியத் தலைமையும், நடுநிலை மாட்சியும், அருள் எழிலும் உடையராய் இறைவன் விரைவில் எழுந்தருளி இந் நாட்டை உய்விப்பானாக!

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

## முல்[4] பொருந்தற் கருத்து வேர்ச்சொல்

பொருந்தற் கருத்தினின்று, ஒத்தல், முட்டுதல், சேர்தல், கூடுதல், மணத்தல், கலத்தல், பொருதல் முதலிய கருத்துக்களும்; ஒத்தற் கருத்தினின்று, அளவிடுதல், மதித்தல், செருக்குதல் முதலிய கருத்துக்களும்; முட்டுதற் கருத்தினின்று, தடை, முடை, முடிவு முதலிய கருத்துக்களும்; சேர்தற் கருத்தினின்று, திரளுதல், பகுத்தல், விரிதல், மிகுதல், செழித்தல், அழகாதல் முதலிய கருத்துக்களும்; பருத்தற் கருத்தினின்று, மொத்தமாதல், வலுத்தல் முதலிய கருத்துக்களும்; கலத்தற் கருத்தினின்று, கலக்கம், மயக்கம் முதலிய கருத்துக்களும்; மயக்கக் கருத்தினின்று, இருட்சி, கருமை முதலிய கருத்துக்களும், வழிநிலைக் கருத்துக்களாகப் பிறக்கும். இவற்றினின்று மேற்கொண்டும் சில கிளைக் கருத்துக்கள் தோன்றும்.

முல்—முல்லை = குத்தகை. (யாழ்ப்.) முல்லைக்காரன் = குத்தகைக்காரன். (யாழ்ப்.)

ஒரு பொருள் முழுவதையும் குறித்த காலத்திற்குப் பயன்படுத்தச் செய்துகொள்ளும் ஒப்பந்தம் குத்தகை.

முல்லை - மொல்லை = 1. மேழம் (பருத்த செம்மறியாட்டுக் கடா). 2. மேழவோரை (சூடா. உள். 9).

மொல்லையிற் போடுதல் = குடும்பப் பொதுச் செலவிற்குக் கொடுத்தல்.

மொல்—மொலு. மொலு மொலு வெனல் = ஈக்கள் மொய்த்தற் குறிப்பு.

மொல்—மொலோர். மொலோரெனல் = சிறு மீன் கூட்டம் நீர்மட்டத்தில் துள்ளிவிழும் ஒலிக் குறிப்பு.

ஒ. நோ: அர. முலாகாத் = சந்திப்பு. இந். மில்னு = சந்திக்கை, சந்திக்க; மில் = சந்தி (முதனிலை).

முல்—மல் = 1. பருமை. (யாழ்ப்.). 2. வளம். "மற்றுன்று மாமலரிட்டு" (திருக்கோ. 178). 3. வலிமை. (பிங்.). 4. மற்போர். "மல்லலைத் தெழுந்து வீங்கி" (சீவக. 268). 5. மல்லன். "மல்லொடு கஞ்சனுந் துஞ்சவென்ற மணிவண்ணன்" (திவ். பெரியதி. 11 : 2 : 3). 6. கண்ணபிரான் மல்லனாய் வாணசுரனை வென்றாடிய கூத்து. (பிங்.).

பல அணுக்கள் அல்லது உறுப்புக்கள் அல்லது பொருள்கள் பொருந்துவதால் (ஒன்று சேர்வதால்) திரட்சி அல்லது பருமை உண்டாகும். ஒ. நோ: "சேரே திரட்சி" (தொல். உரி. 65). மிகுதியால் வளமும் பருமையால் வலிமையும் உண்டாகும். இருவர் அல்லது இரு படைகள் பொருந்தி அல்லது கூடிப் பொருவதே போர். பொரு (பொருந்து)—போர். கல—கலாம், கலகம். கைகலத்தல் என்னும் வழக்கையும் நோக்குக.

மல்—மல்லல்=1. மிகுதி. 2. வளம். "மல்லல் வளனே" (தொல். உரி. 7). 3. செல்வம். "மல்லற்கேண் மன்னுக" (பரிபா. 11: 121). 4. வலிமை. "மல்லன் மழவிடை யூர்ந்தாற்கு" (சிலப். 17, கொளு. 3). 5. பொலிவு. (சூடா.). 6. அழகு "மல்லற்றன் னிறமொன்றில்" (திருக்கோ. 58, பேரா.).

மல்—மலே. மலேதல்=1. ஒத்தல். "கவிகை மாமதிக் கடவுளை மலேய" (கந்தபு. சூரனரசிருக். 9). 2. எதிர்த்தல். (சூடா.). 2. பகைத்து மாறுபடுதல். "இகன்மலேந் தெழுந்த போதில்" (சீவக. 747) 3. போராடுதல். "தத்த மதங்களே யமைவதாக வரற்றி மலேந்தனர்" (திருவாச. 4 : 53).

க. மலெ.

மலேத்தல்=1. மாறுபடுதல். "மடங்கலிற் சீறி மலேத் தெழுந்தார்" (பு. வெ. 3 : 24). 2. பொருதல். "வேந்த னேடு....மலேத்தனே யென்பது" (புறம். 36). 3. வருத்துதல். "மள்ளர் மலேத்தல் போகிய சிலேத்தார் மார்ப" (புறம். 10).

மலே=1. ஈட்டம், சொன்மலே. (திருமுரு. 263). 2. மிகுதி. 3. வளமுள்ள பெரிய இடம். "வறப்பினும் வளந்தரும் வண்மை யும் மலேக்கே" (நன். பொதுப்பா. 28). "மலேயினும் மாணப் பெரிது" (குறள். 124) 4. போர்த் தொழில் "மலேத்தலே வந்த மரையான் கதழ்விடை" (மலேபடு. 331).

ம. மல, க. மலெ.

மல்—மல்கு. மல்குதல்=1. அதிகரித்தல், மிகுதல். "மணநிரை மல்கிய மன்று" (பு. வெ. 1 : 13). 2. நிறைதல். "திசையாவு மல்கின்றே" (1607). 3 செழித்தல். "உயி ரனேத்து மல்க மழைமுகி லானுய்" (தணிகைப்பு. இந்திர. 21).

மல்கு—மல்கா—மல்லா. மல்லாத்தல்=1. மலர்ந்தாற் போல் முகம் மேனேக்கிக் கிடத்தல். "நரகத்தின் மல்லாக்கத் தள்ளி" (திருமந். 199). 2. தோற்றுப் போதல். உ. வ.)

மல்கா—மல்காத்து. (பி. வி.). மல்காத்துதல்=1. கொடி முதலியவற்றைப் படர விடுதல். 2. முகம் மேலாகக் கிடக்கச் செய்தல்.

மல்லா—மல்லார். மல்லார்தல்=1. பரத்தல், விரிதல். 2. முகம் மேனோக்கிக் கிடத்தல். கை காலைப் பரப்பிக் கொண்டு மல்லார்ந்து கிடக்கிறான். (உ. வ.).

மல்லார்—மல்லாரி=1. பரந்த பறைவகை. 2. அகன்று பருத்தவள். மானங்கெட்ட மல்லாரி. (உ. வ.).

மல்லாரி—மல்லரி=பறைவகை. (சங். அக.).

மல்—மல்லாரி=சண்டைக்காரி. (W.).

மல்லார்—மலர். மலர்தல்=1. மிகுதல். "செழுமலராவி நீங்கு மெல்லையில்" (சீவக. 3079). 2. பரத்தல். "வையக மலர்ந்த தொழின்முறை யொழியாது" (பதிற்றுப். 88 : 1). 3. அகலித்தல். "மலரத் திறந்த வாயில்" (குறிஞ்சிப். 203). 4. மொட்டு விரிதல். "வரைமேற் காந்தள் மலராக்கால்" (நாலடி. 283). 5. மனமகிழ்தல். "வரன்கை தீண்ட மலர் குல மாதர் போல்" (பெரியபு. தடுத்தாட். 161). 6. முக மலர்தல். "பூம்புன லூரன்புக.........முகமலர்ந்த கோதை" (திருக்கோ. 363, கொளு).

மலர்த்தல்=1. மொட்டு விரியச் செய்தல். 2. குப்புறக் கிடப்பவனை மல்லாக்கச் செய்தல். 3. மற்போரில் தோற்கடித் தல். 4. ஏமாற்றுதல். 5. வாங்கின கடனைக் கொடாமற் போதல்.

முகம் மலர் போன்றதென்பதும், முகம் மேனோக்கிக் கிடத்தல் மொட்டு விரிந்த நிலையையும் முகங்குப்புறக் கிடத்தல் மலர்ந்த பூக் குவிந்த நிலையையும் ஒக்குமென்பதும், கருத்து.

மலர் — அலர்.

மல்—மல்லி=அகன்று தடித்தவள் (யாழ்ப்).

மல்—மல்லன்=1. மற்போர் செய்வோன். "மறத்தொடு மல்லர் மறங்கடந்த" (பு. வெ. 9 : 4). 2. பெருமையிற் சிறந் தோன். (பிங்.).

மல்லன்—வ. மல்ல.

மல்—மல்லம்=1. அகன்ற தட்டம். (அக. நி.). 2. கன்னம் (கதுப்பு). (யாழ். அக.). 3. மற்போர். (W.). 4. வலிமை. மல்லம்—வ. மல்ல.

மல்—மல்லல்=1. பெருமை. "மல்லலச் செல்வ வடமொழி மறைவாணர்" (திவ் திருவாய். 8 : 9 : 8). 2. வளம். "மல்லலப் பழனத்து" (பதினெ. ஆளுடை. திருவுலா. 8).

மல்—மலி. மலிதல்=1. விம்முதல், பருத்தல். "முலை மலிந்து" (பு. வெ. 11, பெண். 2). 2. மிகுதல். "கனிப்பொறை மலிந்து நின்ற கற்பகப் பூங்கொம்பு" (சீவக. 2541), 3. பரத்தல். "மலைமலிந்தன்ன மார்பும்" (பு. வெ. 11, பெண். 2). 4. விரைதல். "நீ மலிந்து செல்லாய்" (பு. வெ. 11, பெண். 4.) 5. நெருங்குதல். (தொல். சொல். 396, உரை). 6. நிறைதல். "மலிகடற்றண் சேர்ப்ப" (நாலடி. 98). 7. விலை நயத்தல். (உ. வ). 8. புணர்ச்சியின் மகிழ்தல். "மலிதலு மூடலும்" (தொல். பொருளியல், 41). 9. செருக்குதல். "மகிழ்ந்தன்று மலிந்தன்று மதனினு மிலனே" (புறம். 77) 10. செருக்கிச் சொல்லுதல். "உறுபுகழ் மலிந்தன்று" (பு. வெ. 10 : 4, கொளு).

மலி—மலிவு=1. மிகுதி. 2. நிறைவு. "மனைவேள்வி மலிவுரைத்தன்று" (பு. வெ. 9 : 27). 3. உயர்வு. "இம்முப் பாலும், மாமலிவுடனே மற்ற மெலிவொடுசமனு மாமே" (சூடா. 12 : 10). 4. நயவிலை. "மலிவு குறைவது விசாரித்திடுவர்" (அறப். சத. 83). 5. மகிழ்ச்சி. "மலிவுடையுள்ளத்தான்" (பரிபா. 19 : 88). 6. புணர்ச்சியின்ப மகிழ்ச்சி. "மலிவும் புலவியும்" (தொல். செய். 185).

மலிவு—மலிபு=மிகுதி. "வாடையது மலிபு" (பு. வெ. 8 : 16)

மலி—மலிர். மலிர்தல்=1. பெருகுதல். "ஓத மில்லிறந்து மலிர" (நற். 117). 2. நீர் முதலியன ஒழுகுதல். "பின்னு மலிரும் பிசிர்போல" (பரிபா. 6 : 83). 3. பயிலுதல், அடிக்கடி வருதல். "கனியின் மலரின் மலிர்கால்" (பரிபா. 8 : 54).

மல்—மால்=1. பெருமை. "சினமால் விடையுடையான்" (திருவாச. 34 : 3). 2. பெருமையுடையவன். "மாமஞ்ஞை யூர்ந்து நின்ற மால்" (சீவக. 286). 3. வளமை. (அக. நி.) 4. மலை. (அக. நி.).

மால்—மாள்—மாளிகை=1. மாடமுள்ள பெருவீடு. (பிங்.) "மறையவர்க்கு மாளிகைகள் பலசமைத்தார்" (பெரியபு. கோச்செங். 16). 2. அரண்மனை. (பிங்.). 3. கோயில். "உத்தரகோச மங்கை......மாளிகைபாடி" (திருவாச. 16 : 3).

மாளிகை—வ. மாளிகா.

மாளிகைச் சாந்து=உயர்ந்த கலவைச் சந்தனம். "இவன் ஆதரித்துச் சாத்தின மாளிகைச் சாந்தை (திவ். திருப்பல். 8, வ்யா).

மாள்—மாண். மாணுதல்=1. மிகுதல், பருத்தல். ''மலையினும் மாணப்பெரிது'' (குறள். 124). 2. நிறைதல். ''மாணுப் பிறப்பு'' (குறள். 1002). 3. நன்ருதல், ''மாண்டற் கரிதாம் பயன்'' (குறள். 177) 4. சிறத்தல், மாட்சிமைப் படுதல்.
மாண—மாண்பு=1. பெருமை. (யாழ். அக.). 2. மாட்சிமை. ''இல்லவள் மாண்பானல்'' (குறள். 53). 3. நன்மை. (அரு. நி.). 4. அழகு. ''அரன்மிடற்றின் மாண்ப தன்றே'' (திருக்கோ. 323).

மாண்—மாட்சி=1. மகமை (மகிமை). ''எனைமாட்சித் தாகியக் கண்ணும்'' (குறள். 750). 2. தெளிவு, விளக்கம். ''மூலவோலை மாட்சியிற் காட்டவைத்தேன்'' (பெரியபு. தடுத்தாட். 56). 3. அழகு. ''நூலோர் புகழ்ந்த மாட்சிய...... புரவி'' (பெரும்பாண். 487). 4. இயல்பு. ''மரபுநிலை தெரியா மாட்சிய'' (தொல். மர. 94).

மாட்சி—மாட்சிமை=மகமைத் தன்மை. ''மாட்சிமையுடையோர் கொடுக்கும் மரபுபோல'' (சிலப். 16 : 23, உரை).

மாண்=மாட்சிமை. ''மாணெழில்......தோளாய்'' (கலித். 20 : 15).

மாண்—மாணம்=1. மாட்சிமை. (அக. நி).
மாண்—மாணல்=1. மாட்சிமை. 2. நன்மை. (அரு. நி.).
மாணம்—மாடம்=1. வானளாவிய பன்னிலை மாளிகை. ''மஞ்சுதோய் மாடமணி உத்தரகோச மங்கை'' (திருவாச. 16 : 4) ''எழுநிலை மாடம் கால்சாய்ந் துக்கு'' (நறுந் 54). 2. மேட்டிடத்திற் கட்டிய பெருங்கோயில். ''எண்டோளீசற் கெழின் மாட மெழுபது செய்து'' (திவ். பெரியதி. 6 : 6 : 8). 3. மேனிலை.

ம. மாடம், க. மாட, தெ. மாடுகு (g).

மாடம்—மாடி=மேனிலையுள்ள வீடு. ஏழடுக்கு மாடி (உ. வ.).

மாள்—மாழை=1. திரட்சி. (பிங்.). 2. கனியக்கட்டி. ''கனக மாழையால்'' (சீவக. 913). 3. மாதர் கூட்டம். (அக. நி.).

மல்—மன். மன்னுதல்=(செ. கு. வி.) 1. பொருந்துதல். ''மன்னு சொகினம்'' பு. வெ. 10 : 11). 2. மிகுதல். ''மன்னிய வேதந் தரும்'' (ஆசாரக். 96) 3. தங்குதல். ''உத்தரை வயிற்றின் மன்னிய குழவி'' (பாகவத. 1, பரிட்சத்து வின்ரு. 1). 4. நிலைபெறுதல். ''மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை''

(குறள். 556). 5. உறுதியாய் நிற்றல். (W.). (செ. குன்ருவி.) அடுத்தல். (பிங்.). ஒ. நோ : L. *manere*, stay. L. remanere, E. remain.

மன் (இடை.)=1. மிகுதிக் குறிப்பு. "சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே" (புறம். 75) 2. பெரும்பான்மைக் குறிப்பு. "கசதப மிகும்வித வாதன மன்னே" (நன். 165). 3. நிலைபேற்றுக் குறிப்பு. "மன்னே......நிலைபே ருகும்" (நன். 432).

ஒ. நோ : *OE.* manig, *OS, OHG.* manag, *Goth.* manags, *E.* many. g=y.

மன்—மன்று=1. அவை, அம்பலம். 2. தில்லைப் பொன்னம்பலம். "தென்றில்லை மன்றினு ளாடினை போற்றி" (திருவாச. 4 : 92). 3. அறங்கூறவை. "நெடுமன்றில் வளனுண்டு" (கம்பரா. மூலபல. 145) 4. ஆன்கணம். "மன்ருடி சொல்ல" (திருவாலவா. 52: 5, அடிக்குறிப்பு.). 5. ஆன்தொழு. "ஆன்கணம்......மன்றுநிறை புகுதர" (குறிஞ்சிப். 218) 6. மரத்தடித் திண்ணைப் பொதுவிடம். "மன்றும் பொதியிலும்" (தஞ்சைவா. 34). 7. மக்கள் கூடும் நாற்சந்தி. "மன்றிலே தன்னுடைய வடிவழகை முற்றூட்டாக அனுபவிப்பிக்கு மவனை" (ஈடு, 3 : 6 ; 3). 8. மணம். "மன்றலர் செழுந் துளவு" (கம்பரா. திருவவ. 24).

"பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறும்" என்பதற்கேற்ப, ஒன்றன் மணம் அதனெடு சேர்ந்த இன்னென்றிற் கலத்தலால், மணம் மன்றெனப்பட்டது.

மன்று படுதல்= அம்பலத்திற்கு வருதல், வெளிப்படுதல். "காம மறையிறந்து மன்று படும்" (குறள். 1138).

மன்று—மன்றம்=1. அவையம். (பிங்.). 2. அறங்கூறவையம். "அறனவின் மன்றத் துள்ளோர்" (திருவிளை. மாமனுக. 35). 3. பொன்னம்பல முள்ள தில்லை. (பிங்.). 4. மரத்தடிப் பொதுவிடம். "மன்றமும் பொதியிலும்" (திருமுரு. 226). 5. குதிரைகளைப் பயிற்றும் செண்டுவெளி. "பேரிசை மூதூர் மன்றங் கண்டே' (புறம். 220, உரை). 6. போர்க்களப் பரப்பின் நடுவிடம். "செஞ்சுடர்க் கொண்ட குருதி மன்றத்து" (பதிற்றுப். 35 : 8) 7. மக்கள் கூடும் வெளியிடம். "மன்றம் போழும் மணியுடை நெடுந்தேர்" (குறுந். 301). 8. ஆன்தொழு. "புன்றலை மன்றம்" (குறுந். 64). 9. பேய்கள் கூடுமிடம்.

"காய்பசிக் கடும்பேய் கணங்கொண் டீண்டு
மாலமர் பெருஞ்சினை வாகை மன்றமும்"

(மணி. 6 : 82-3). 10. பறவைகள் கூடுமிடம். "புள்ளிறை கூடும் வெள்ளில் மன்றமும்" (மணி. 6 : 85). 11. மக்கள் குடியிருக்கும் வீடு. "வதியுஞ் சில மன்றமே" (இரகு. நகரப். 71). 12. நெடுந்தெரு. (சூடா). 13. நோன்பிகள் கூடுமிடம்.

"சுடலை நோன்பிக ளொடியா வுள்ளமொடு
மடைதீ யுறுக்கும் வன்னி மன்றமும்"

(மணி 6 : 86-7). 14. மணம். (பிங்.)

'அம்' ஒரு பெருமைப் பொருட்பின்னொட்டாதலால், மன்றம் என்பது இலக்கண நெறிப்படி பெருமன்றைக் குறிக்கும்.

மன்று—மன்றகம் = அம்பலம். "மன்றகத்தே நம்பி மாட மெடுத்தது" (திருமந். 148).

மன்று—மன்றல் = 1. தமிழத் திருமணம். 2. இருபாற் கூட்டம். "மறையோர் தேஎத்து மன்றலெட்டனுள்" (தொல். களவு. 1). 3. புணர்ச்சி. "மன்றன் மாமயில்" (சீவக. 2171). 4 நெடுந்தெரு "மன்றல் வருஞ்சேனை" (குற்ரு. குற. 73 : 2). மணம். (பிங்.).

மன்று—மந்து = 1. ஆன்கணம். 2. ஆன்தொழு. 3. எருமைநிரை. 4. நீலமலைத் துடவர் குடியிருப்பு.

எ-டு: ஒற்றைக்கல் மந்து (ootacamund).

துடவர்க்கு எருமைநிரை யோம்பலே பிழைப்புவழி யாதலால் அவர் குடியிருப்பு மந்து எனப்பட்டது. ஆட்டுப் பட்டிகளும் மாட்டுப் பட்டிகளும் இருந்த ஊர்கள், பட்டியென்றே பெயரீறு பெற்றிருத்தலை நோக்குக.

ஒரே பெருங்கல் இருந்த மந்து ஒற்றைக்கல் மந்து எனப் பட்டது. தெலுங்கு நாட்டில் ஒருபகுதி ஒரு கல் நாடு அல்லது ஓராங்கல் (Warangal) நாடு எனப் பெயர் பெற்றிருத்தலைக் காண்க.

ஆங்கிலர் முதன்முதல் நீல மலையில் அடைந்த இடம் ஒற்றைக்கல் மந்து. அதனால் அது சிறப்புப் பெற்றது. அதன் பெயரின் ஆங்கில வடிவை யொட்டி, உதக மண்டலம் என்னும் பெயரை அமைத்துக் கொண்டனர் வடமொழி வெறியர். அதன் மரூஉவான உதகை என்பதற்குத் தலைமாருக, ஒற்றகை என்று வழங்குவதே தமிழ்நெறிக் கேற்றதாம்.

மந்து—மந்தை=1. கால்நடைக் கூட்டம். ஆடுமாடுகள் மந்தை மந்தையாய் மேய்கின்றன. (உ. வ.). 2. ஊரின் பொது மேய்ச்சலிடம் மந்தைவெளி. (உ. வ.). 3. ஊரிடைப் பொது வெளியிடம். 4. ஆடுமாடு மேய்க்கும் குலத்தாருள் ஒரு பிரிவுப் பெயர்.

தெ. மந்து, க. மந்தெ.

மன்—மனை=1. பலர்கூடி அல்லது நிலைத்து வதியும் வீடு. "சீர்கெழு வளமனை திளைத்து" (சீவக. 828). 2. வீடு கட்டுதற்குரிய வெறுநிலம். ஒருமனை 2400 சதுர அடி, (உ. வ.). 3. அல்லும் பகலும் வீட்டில் வதியும் மனைவி. "பிறன்மனை நோக்காத பேராண்மை" (குறள். 148). 4. வீட்டில் வதியும் குடும்பம். 5. துறவுக்கு எதிரான இல்வாழ்க்கை. "மனைத்தக்க மாண்புடைய ளாகி" (குறள். 51). 6. சூதாட்டிற்கு அல்லது கணியத்திற்கு வரையும் அறை.

ம. மன, க. மனெ.

ஒ. நோ: *E.* manor, f. *ME.* f. *AF.* maner, *OF.* manoir, f. *L. manere*, remain.

*E.* manse, f. *ME*, f. med. *L. mansus*, house (*manere*, *mans*, remain).

*E. mansion*, large residence, f. *ME.* f. *OF.* f. *L.* mansionen, f. mansus, f. *manere*, *mans*, remain.

மனை—மனைவி=1. மனையிலுறையும் வாழ்க்கைத் துணைவி. "இன்ப மருந்தினுன் மனைவி யொத்தும்" (சீவக. 1895). 2. முல்லை மருத நிலங்களின் தலைவி. (திவா.). 3. மனையுடையாள். "பூ முளரி மனைவி" (உபதேசகா, சிவவிரத. 215).

மன் + திரம் = மன்றிரம்—மந்திரம்—1. வீடு. "மந்திரம் பல கடந்து" (கம்பரா. ஊர்தேடு. 138). 2. அரண்மனை. (பிங்.). 3. தேவர் கோயில். (பிங்.). "ஆதி தனது மந்திரத்து" (கந்தபு. காமதகன. 67). 4. உறைவிடம். "மான்மதங் கமழ்கொடி மந்திரந் தொறும்" (பாரத. வேத்திர. 29). 5. மண்டபம். 6. குகை. "அரிமந்திரம் புகுந்தா லானை மருப்பும்" (நீதிவெண். 2). 7. குதிரைச் சாலை. (பிங்.). 8. குதிரைக் கூட்டம். (சூடா.).

மந்திரம்—வ. மந்திர.

மக்கள் உறைவிடத்தையும் அரிமாக் குகையையும் குதிரைக் கூடத்தையும் குறிக்கும் மந்திரம் என்னும் சொல் ஒன்றே.

சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலி, குதிரைச் சாலையைக் குறிக்கும் மந்திரம் என்னும் சொல்லை வேறென மயங்கிப் பிரித்துக் கூறியது வழுவாகும். மக்கள் படுக்கை, விலங்கின் படுக்கை, பறவைக் கூடு ஆகிய மூன்றையும், சேக்கை யென்னும் ஒரே சொல் பொதுவாகக் குறித்தல் காண்க.

சூழ்வினையைக் குறிக்கும் மந்திரம் என்னும் சொல் வேறு. அது அமைப்பில் ஒத்திருப்பினும், அதன் முதனிலையான மன் என்னும் சொல் முன் என்பதன் திரிபாகும். முன்னுதல் = கருதுதல், சூழ்தல். மன் + திரம் — மன்திரம் — மந்திரம் — வ. மந்த்ர. மன் = மந்திரம். (பிங்.). இது முதனிலைத் தொழிற் பெயரும் தொழிலாகு பெயருமாகும்.

மன் (பெயர்ச் சொல்) = 1. பெருமை. (யாழ். அக.). 2. பெரியோன், தலைவன். "மன்னுயிர் நீத்த வேலின்" (பு வெ. 4 : 23, கொளு). 3. கணவன். "மன்னொடுங் கூடி...... வானகம் பெற்றனர்" சிலப். 25 : 59). 4. அரசன். "மன்னுடை வேலிருய்" (சீவக 1200 . 5 அரசு. "மன்பெறு மரபின் ஏனோர்க்கு முரிய" (தொல். மர. 84).

மன் — மன்னன் = 1. அரசன். "மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம். (புறம். 186) 2 தலைவன். "சேனை மன்னர்கள்" (கந்தபு. சூர. இரண்டா. 47). 3. கடவுள். (பிங் . 4. கணவன். "மங்கை யுன்றன் மன்னன்" (பிரமோத். 111).

மன் — மன்னவன் = 1. அரசன். "முறை செய்து காப்பாற்று மன்னவன்" (குறள். 388). 2. விண்ணுலக வேந்தன். "மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்" (சிலப். 5 : 173).

மன்றுதல் = 1. மிகுதல். 2. உறுதியாதல். 3. தெளிவாதல்.

மன்ற (நி. கா. வி. எ.) = 1. மிக. "மன்ற வவுணர் வருத்திட" (கந்தபு. தேவ. போற். 6). 2. தேற்றமாக. "சென்று நின்றோர்க்குந் தோன்று மன்ற" (புறம். 114). "மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்" (தொல். இடை. 17). 3. தெளிவாக. "நோற்றோர் மன்றநின் பகைவர்" (புறம். 26).

மன்றுதல்² = தண்டஞ் செய்தல். "அடிகெட மன்றிவிடல்" (பழ. 288). இது அறமன்றின் செயல்.

மன் — மான். மானுதல் = ஒத்தல். மன்னர் சேனையை மானு மன்றே. (கம்பரா. ஆற்று. 14 .

மான் — மான = போல. (உவமை யுருபு).

"வினைபயன் மெய்யுரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம்" (தொல். உவம. 1)
"அன்ன ஆங்க மான இறப்ப
என்ன வுறழத் தகைய நோக்கொடு
கண்ணிய எட்டும் வினைப்பா லுவமம்" (ஷை ஷை 12)

மான் = ஒப்பு. (பிங்.).

மான்—மானம் = 1. ஒப்புமை. "மானமில்லுயர் மணிவண்ணன்" (சீவக. 2747). 2. அளவு. 3. பட்டணம் படியில் அரைப்படிக்குச் சற்று மிகுந்த முகத்தலளவு. (ஆம்பூர் வழக்கு). 4. அவ்வளவு கருவி. 5. உரையாணி. (திருக்கோ. 335, உரை). 6. கணிப்பு. சூரமானம் 7. அளவைக் கூறு. இருமானம், மும்மானம். 8. மதிப்பு, கண்ணியம். "நன்றே காண் மானமுடையார் மதிப்பு" (நாலடி. 294). 9. பெருமை. "புகழு மானமு மெடுத்து வற்புறுத்தலும்" (தொல். அகத். 41). 10. வலிமை. (சூடா.). 11. தன்மதிப்பு. "இளிவரின் வாழாத மான முடையார்" (குறள். 670), "மறத்திடை மானமேற் கொண்டு" (பு. வெ. 5 : 6). 12. கற்பு. 13. பூட்கை, வஞ்சினம். "அப்படியே செய்வேனென மானஞ் செய்து" (இராமநா. அயோத். 7). 14. புலவி. "மான மங்கையர் வாட்டமும்" (சீவக. 2382). 15. மானக்கேட் டுணர்ச்சி. "உயிர் நீப்பர் மானம் வரின்" (குறள். 669), "மானந் தலைவருவ செய்பவோ" (நாலடி. 198). 16. வெட்கம். "வஞ்சியை மீட்கிலேனென்னு மானமும்" (கம்பரா. சடாயுவுயிர்நீ. 145). 17. குற்ற அளவு, குற்ற நிலை. "மெய்ந்நிலை மயக்க மான மில்லை" (தொல். எழுத். மொழி. 14). 18. பொருளளவு. எ - டு: வருமானம்.

(இடை.) 1. அளவு குறித்துவரும் தொழிற் பெயரீறு. எ - டு: பெறுமானம். 2. நிலை குறித்துவரும் தொழிற்பெயரீறு. எ - டு: கட்டுமானம்.

ஒ. நோ: "*Moon* [A. Sax. *mona*, the moon (masc.); cog. O. Fris. *mona*, Goth *mena*, Ice. *mani*, Dan. *maane*, D. *maan*, OHG. *mane*, (the Mod. G. *mena*, moon, is a derivative like E. *month*). Lith. *menu*, Gr. *mene*, Per. *ma*, Skr. *mas*, all meaning the moon; from a root *ma*, to measure: the moon was early adopted as a measmer of time, Lence the name."

—The Imperial Dictionary.

மான்—மானி. மானித்தல் = (செ. கு. வி.) 1. நாணுதல், மானவுணர்ச்சியால் வெட்குதல். "கூற்றமும் மானித்தது" (பு. வெ. 7 : 25, உரை). 2. செருக்குதல். "நின்னைப் பணியாது மானித்து நின்ற அரசன்" (நீல. 529, உரை).

(செ. குன்றுவி.) 1. அளவிடுதல். 2. மதித்தல், பெருமைப் படுத்துதல். "நாணி மானித்தோமே நாமென்பார்" (காளத். உலா. 243).

ஒ. நோ : தீர்மானம் — தீர்மானி.

மானம் — மானி = 1. மதிப்பு அல்லது கண்ணிய முள்ளவ-ன்-ள். 2. செருக்குள்ளவ-ன்-ள். "களிமடி மானி" (நன். 39).

மான் — மா. மாத்தல் = அளத்தல். இவ்வினை இன்று வழக்கற்றது. ஆயின், மா என்னும் முதனிலைத் தொழிலாகு பெயர் $\frac{1}{20}$ என்னும் கீழ் வாயிலக்கத்தைக் குறித்து வழங்கு கின்றது. அதனால், நிலவளவையில் ஒரு வேலியின் $\frac{1}{20}$ பாகம் மா எனப்படுகின்றது. "மாநிறை வில்லதும் பன்னாட் காகும்" (புறம். 184) என்பது, இதன் தொன்று தொட்ட வழக்கை யுணர்த்தும்.

மா — மாத்திரம் = அளவு. "வெளவினன் முயங்கு மாத்திரம்" (கலித். 47 : 22). அவன் எனக்கு எம் மாத்திரம்? (உ. வ.).

வடார்க்காட்டு ஆம்பூரில், ஒரு பொருளின் விலையை வினவும்போது, "அதன் விலை எம்மாத்தம்?" என்பது இன்றும் உலக வழக்கு. எம்மாத்திரம் என்பது எம்மாத்தம் என்று சிதைந்துள்ளது. (தொடரும்)

---

## மலையாள அகர முதலியின் சொற்றொகுப்புப் பணி

*கேரளப் பல்கலைக் கழகமும் அரசும் இணைந்து 1953 இல் தொடங்கிய மலையாளப் பேரகர முதலியின் முதலிரு மடலங்கள் (ஒவ்வொன்றும் 1000 பக்கங்கட்குக் குறையாமல்) இதுவரை வெளியிடப் பட்டுள்ளன. இவ்வகர முதலி தொகுப்புப் பணியில் ஈடுபட்டுள்ளோர் 36 பேர். முதல் பத்தாண்டுகள் சொற்றொகுக்கவே செலவிடப் பட்டுள்ளன.*

*மக்களின் பேச்சு வழக்கிலுள்ள தொழிற் சொற்கள், சிறப்புச் சொற்கள் ஆகியவற்றைத் தொகுக்கச் செய்தித்தாள், கிழமை இதழ் களில் விடுத்த வேண்டுகோள்களை ஏற்று 300 க்கும் மேற்பட்ட மலையாள அன்பர்கள், தாமாகவே பல்வேறு தரப்பட்ட மக்களின் பேச்சில் வழங்கும் வட்டார வழக்குகளைத் தொகுத்து அனுப்பினர். அப்படித் தொகுத்து அனுப்பியவரின் பெயர்ப்பட்டியல் மலையாளப் பேரகர முதலியில் இடம் பெற்றுள்ளது. இலக்கத் தீவிலிருந்தும்கூட அனுப்பி யுள்ளனர். மொழி ஞாயிறு. ஞா. தேவநேயப் பாவாணர் தலைமையில் தமிழக அரசு தோற்றுவித்துள்ள செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலிக்காகத் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் இலங்கை மலேயா போன்ற கடல் கடந்த தமிழ்ப் பகுதிகளிலிருந்தும் அவ்வப் பகுதி வட்டார வழக்குகளைத் தமிழன்பர்கள் தொகுத்து அனுப்புவது தமிழுக்குச் செய்யும் சிறப்பு வாய்ந்த தொண்டாகும்.*

—மதிவாணன்

# சங்கநூல்களில் மீன்கள்

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

(பரல்-எ, ௬0எ ஆம் பக்கத் தொடர்ச்சி)

13. சுறு :

மீனினத்தில் சுருமீன் மிகமிகப் பழங்காலத்தில் தோன்றியதாக அறிவியலார் கூறுவர். மீனினத்தில் உடலில் எலும்பற்ற மீன் சுருவாகும். மீன்களில் கொடுமை வாய்ந்ததாக இதைக் கருதுவர். சுருவைப்பற்றிப் பல பாடல்கள் சங்க நூல்களில் காணப்படுகின்றன.

"கழிச்சுரு வெறிந்த புட்டா ளத்திரி
நெடுநீ ரிருங்கழிப் பரிமெலிந் தசைஇ" —அகம், 120

"இருங்கழிப் புகாஅர் பொருந்தத் தாக்கி
வயச்சுரு வெறிந்தன வலவ னழிப்ப" —அகம், 190

"துறையு மான்றின்று பொழுதே சுறவு
மோத மல்கலின் மாறு யினவே" —அகம், 300

"கூர்வளிக் கடுவிசை மண்டலிற் பாய்ந்துடன்
கோட்சுருக் கிழித்த கொடுமுடி நெடுவலை" —அகம், 340

"விலங்கிரும் பரப்பி னெறிசுரு நீக்கி
வலம்புரி மூழ்கிய வான்றிமிற் பரதவர்" —அகம், 350

"இறவா ரினக்குரு கொலிப்பச் சுறவங்
கழிசேர் மருங்கிற் கணைக்கால் நீடி" —நற்றிணை, 27

"திணச்சுரு அறுத்த உணக்கல் வேண்டி
இனப்புள் ஓப்பும் எமக்குநலன் எவனோ" —நற்றிணை, 45

"கணைக்கால் மாமலர் கரப்ப மல்குகழித்
துணைச்சுரு வழங்கலும் வழங்கும் ஆயிடை
எல்விமிழ் பனிக்கடல் மல்குசுடர்க் கொளீஇ
எமரும் வேட்டம் புக்கனர் அதனால்" —நற்றிணை, 67

"கோட்சுரு வழங்கும் வாட்கேழ் இருங்கழி" —நற்றிணை, 78

"உளனே வாழி தோழி வளைநீர்க்
கடுஞ்சுரு எறிந்த கொடுந்திமில் பரதவர்
வாங்குவிசைத் தூண்டில் ஊங்கூங் காகி" —நற்றிணை, 199

"இளையரும் முதியருங் கிளையுடன் குழீஇக்
கோட்சுரு எறிந்தெனச் சுருங்கிய நாம்பின்
முடிமுதிர் பரதவர் மடமொழிக் குறுமகள்

வலையுந் தூண்டிலும் பற்றிப் பெருங்கால்
திரையெழு பௌவம் முன்னிய
கொலைவெஞ் சிறாஅர் பாற்பட் டனளே'' —நற்றிணை; 207

"தங்கின் எவனோ தெய்ய செங்காற்
கொடுமுடி யவ்வலை பரியப் போகிய
கோட் சுறாக் குறித்த முன்பொடு
வேட்டம் வாயா தெமர்வா ரலரே.'' —நற்றிணை, 215

"உண்டுகொல் வாழி தோழி தெண்கடல்
வன்கைப் பரதவர் இட்ட செங்கோல்
கொடுமுடி யவ்வலை பரியப் போகிக்
கடுமுரண் எறிசுறா வழங்கும்
நெடுநீர்ச் சேர்ப்பன்தன் நெஞ்சத் தானே'' —நற்றிணை, 303

"கடுஞ்சுறா வெறிந்த கொடுந்தாள் தந்தை
புள்ளிமிழ் பெருங்கடற் கொள்ளான் சென்றென''
—நற்றிணை, 392

"எல்லி வப்மோ மெல்லம் புலம்ப
சுறவினங் கலித்த நிறையிரும் பரப்பின்
துறையினுந் தஞ்சாக் கண்ணர்'' —நற்றிணை, 223

"பன்மீ னுப்பட் டிங்கள் போலவும்
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப'' —புறம் 13

"பெருமகி ழிருக்கை மரீஇச் சிறுகோட்டுக்
குழவித் திங்கட் கோணேர்ந் தாங்குச்
சுறவுவா யமைத்த சுரும்புசூழ் சுடர்நுதல்''
—பெரும்பாண், 383-386

"சலப்புகன்று சுறவுக்கலித்த
புலவுநீர் வியன்பௌவத்து'' —மதுரைக்காஞ்சி, 112-3

"வயச்சுறா வழங்குநீ ரத்தம்'' —குறுந்தொகை, 230

"வயச்சுறா வெறிந்த புண்டணிந் தெந்தையும்
நீனிறப் பெருங்கடல் புக்கனன் யாயும்''
—குறுந்தொகை, 269

"எறிசுறாக் கலித்த விலங்குநீர்ப் பரப்பின்''
—குறுந்தொகை, 318

"கொல்லேற்றுச் சுறவினங் கடிகொண்ட மருண்மாலை''
—கலி, 123

"சுறாவே றெழுதிய மோதிரந் தொட்டாள்'' —கலி, 84

சுறாமீனைப் பலரும் பார்த்திருப்பர். சுறாமீன் கடலில் வாழ்வது. ஆனல், ஆறுகளிலும் பெருங்கழிகளிலும் சுறாமீன் கடலிலிருந்து ஏறிச் செல்லும். சங்க நூல்களில் நெடுநீர் இருங்கழியிலும் ஆறு கடலோடு கலக்கும் துறையிலும் சுறாமீனைக் கூறியிருப்பது

உண்மையான செய்தியே. சில குறிப்பிட்ட காலங்களில் சுரு மீன் கடலோரங்களிலும் கழிகளிலும் உலவுவது வழக்கமாகும். சுருமீனைக் கடல்நீர்ப் பரப்பில் வேட்டையாடியதைப் பற்றியே சங்க நூல்களில் பெரும்பாலான பாடல்கள் கூறுகின்றன. கடலில் சென்று வேட்டையாடிய பெரிய, வலிய சுருவை வயச் சுரு என்று அழைத்தனர். சுருமீன் வலிமை மிக்கது. எளிதில் பிடிக்க முடியாதது. மனிதர்களைச் சுருமீன் கடித்து விழுங்கிவிடும். கொல்லும் வழக்கமுடையதால் சுருமீன் ஆட்கொல்லியாகும். சங்க நூல்களில் 'கோட்சுரு' என்று கொல்லும் சுருவை அழைத்துள்ளனர். கடுஞ்சுரு என்றும் 'கடுமுரண் எறிசுரு' என்றும் வர்ணிக்கப்பட்டுள்ளது. சுரு முரண்பட்டு மனிதர், மீன்கள் எல்லாவற்றையும் தாக்கித்துண்டித்து விழுங்கி விடும் கொடுமை வாய்ந்தது. இதன் வாய் மிகக் கொடுமை வாய்ந்தது என்று இன்றும் வெளிநாடுகளில் பயப்படுவர். இதன் கொடுமைச் செயலைப் படமாக்கித் திரையில் காட்டி வரும் (Jaws) என்ற நிழற்படம் மேல்நாட்டில் இன்று பெரும் வருவாயைத் தந்துள்ளது. சங்க நூல்களில் 'எறிசுரு' என்று கூறுவது வழக்கமாகும். சுருமீன் தாக்கிக் கொல்வதால் எறிசுரு என்றழைக்கப்பட்டது. கழியில் சுருமீன் தாக்கியதால் கோவேறு கழுதை புண்ணுடைய காலுடன் விரைவாக நடக்க முடியாது சென்றதாக அகநானூறு கூறியுள்ளது. சுருமீன் தாக்கியதால் புண்ணாகிய தந்தையைப்பற்றித் தலைவி சொல்வதை ஒரு குறுந்தொகைப் பாடலில் காணலாம். சங்ககாலத்தில் சுருவை வலை கொண்டும் சாட்டுளி யென்றதோர் எறி ஈட்டியைக் கொண்டும் வேட்டையாடினர். தூண்டிலிலும் பிடித்தனர். பெரிய, வலிய சுருவைக் கயிற்றோடு சேர்ந்த சாட்டுளி வீசிப் பிடித்து இழுத்துப் படகில் கொணர்ந்து துண்டாக்கிப் போட்டுக் கரைக்குக் கொண்டுவந்தனர். சங்க நூல்களில் 'செங்கோல் கொடுமுடி வலையை'க் கிழித்துச் சுரு சென்றதாகக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். கடல் வேட்டையில் சுருவைக் கொல்வதையே பெரும் வேட்டையாகச் சங்ககாலத்தில் கருதினர். இளையரும் முதியரும் சுற்றத்தாருடன்சேர்ந்து வேட்டையாட வீசிய வலையைச் சுருமீன் கிழித்ததால் வலை சுருங்கினதாக நற்றிணை கூறியுள்ளது. தூண்டிலில் மாட்டிய சுரு அலைந்து இழுத்து அலைக்கழிக்கும் இயற்கையான செய்தியை நற்றிணை 199ஆம் பாடல் கூறியுள்ளது. திமில்களில் சென்று சுருவை வேட்டையாடுவர் என்று பாடல்களில் கூறப்பட்டுள்ளது. சுரு மீன்கள் காலையிலும் மாலையிலும் கடல்நீர்ப் பரப்பில் உலாவும் என்று கூறுவர். ஆதலின் சுரு மலிந்த கடலில் காலை மாலை வேளைகளில் நீராடக்கூடாது என்று இக்காலத்தில் கூறுவர்.

நற்றிணையில் (67) கதிரவன் மறையும் வேளையில் 'துணைச்சுறு வழங்கலும் வழங்கும்' என்று கூறப்பட்டுள்ளதைக் காணலாம். அகநானூற்றுப் பாடலிலும் ஒளி மழுங்கியபோது நீர்த்துறையில் ஓதம் ஏறினதால் சுருக்கள் பகையாகின என்று கூறியிருப்பதைக் காணலாம். ஆதலின் சுருமீன்கள் கடற்கரையிலும் துறையிலும் வரும் காலத்தைச் சங்ககாலத்தில் தெரிந்தே இருந்தனர் என்பது தெளிவாகின்றது. சிந்தாமணியில் ஒரு நகரத்தின் கிடங்கினைக் கூறும்போது அதில் சுருவும் முதலையும் இருந்தனவாகச் சொல்லப்பட்டுள்ளது.

"கோட்சுறு வினத்தொடு முதலைக் குப்பைகள்
ஆட்பெறு திரிதர வஞ்சிப் பாய்வன
மோட்டிருப் பனிக்கிடங் குழக்க மொய்த்தெழுந்
திட்டருப் புள்ளின மிரற்று மென்பவே"

—சீவகசிந்தாமணி, 95

"சுறவணி சூழ்கிடங் காரெயின் மூதூர்
இறையணிக் கேட்கவுய்த் திட்டனர் பூசல்"

—சீவகசிந்தாமணி, 427

கிடங்கில் சுறவுமீன் எப்படி வந்தது என்ற கேள்வி எழுமென்று கருதி நச்சினார்க்கினியர் சிந்தாமணிப் பாட்டிற்கு நுண்ணிய உரை கூறியுள்ளார். "முன்னே கழிய ணைந்ததைப் பெறுதலின், சுறவு கூறினார். கரையில் அஞ்சி ஆழத்திற் சென்றால் ஆளைக் கொல்லுதல் அவற்றிற்குத் தொழில்" என்று கூறினார். நகரக் கிடங்காகிய அகழி கடற்கழியோடு சேர்ந்து இருந்ததால் கடலிலிருந்த சுறு கழி வழியாகக் கிடங்குக்கு வரும் என்று கருத வேண்டும். அக் காலத்தில் கடற்கரைக்கருகிலிருந்த நகரங்களில் கழியை அணைத்தே அகழிகளை அமைத்துச் சுருமீன்கள், முதலைகள் வாழும்படி செய்துகொண்டனரென்று எண்ண வேண்டியுள்ளது. சுருவுக்கு அஞ்சி மோட்டு இருல் பாய்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. சுருமீன்கள் இருக்களைப் பிடித்துத் தின்னுமென்று கூறுவர்.

"தொடுகடற் றுறைதுறை திரிதரும் சுறூஉ
கருங்கழி கலந்து கலிதரும் கராஅ
மறிதிரை மகரமும் வழாஅ
எறிநீர்ச் சேர்ப்ப இந்நெறி வரத்தகாஅ"

—யாப்பருங்கல விருத்தி-மேற்கோள்

"கொடுந்திறல் உடையன சுறவேறு கொட்பதனால்
இருங்கழி இரவருதல் வேண்டா வென்றிசைத்திலமோ"

—யாப்பருங்கல விருத்தி-மேற்கோள்

நீர்த்துறையில் சுருக்கள் சுற்றும், திரியும் என்று யாப்பருங்கல விருத்தி மேற்கோள் பாடல்கள் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். மனித இரத்தத்தை நுட்பமான மோப்ப சக்தியால் சுருமீன்கள் அறிந்துகொண்டு கூட்டமாகப் பாய்ந்து ஆட்களைக் கடித்துக் குதறும் என்று கண்டுள்ளனர்.

"தூத்திரட் சுருவினந் தொக்கபோன் மறவரும்
ஏத்தருஞ் சிலைகைவா ளிலங்குவே லேந்தினர்"

—சீவகசிந்தாமணி, 1845

சுருமீன்கள் தொக்குத்தாக்குவதையே சிந்தாமணி உவமையாகக் கூறியுள்ளது. சுருக்களில் ஆண்மீனைப் பற்றித் தனியாகத் தொல்காப்பியமும் பிற நூல்களும் கூறியுள்ளன.

"ஆற்றலங் குமரன் செல்வா னலைகடற் றிரையி னெற்றி
ஏற்றுமீ னிரியப் பாய்ந்த வெறிசுரு வேறு போன்றான்"

—சீவகசிந்தாமணி, 2283

சுருவேறு என்று சிந்தாமணி கூறியுள்ளது. ஆண் சுரு மிகுந்த வலியுள்ளது என்று அக்காலத்தில் கருதினர். ஏற்றுமீன் இரியச் சுரு பாய்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. சுரு எல்லா மீன்களையும் வேட்டையாடிக் கவரும் கொடுமை வாய்ந்ததென்று கூறுவர்.

எறி சுருவைக் கடல் பரப்பில் நீக்கிப் பரதவர் வலம்புரிச் சங்கை எடுக்க மூழ்கினதாக அகநானூற்றில் கூறப்பட்டுள்ளது. கி. பி. 13 ஆம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்த மார்க்கோ போலோ என்ற வெனீஸ் வணிகன் மன்னார்குடாவில் முத்தெடுக்கப் பரதவர் மூழ்கும்போது சுருமீன்களைப் பிராமணர்கள் மந்திரத்தால் கட்டுப் படுத்தியதைக் கண்டதாகக் கூறியுள்ளான். ஆனால், பூசாரிகளையே தவறாகப் பிராமணர்கள் என்று மார்க்கோபோலோ கூறியிருக்கலாம். பூசாரிகளே கண்ணைக் கட்டவும் வாயைக் கட்டவும் மந்திரம் போடுவது வழக்கமாகும். அவர்களே சுருமீன்களின் வாயைக் கட்ட மந்திரம் போட்டிருப்பர். சங்க காலத்திலேயே சுருமீன்களை மந்திரத்தால் நீர்ப்பரப்பில் நீக்கி வலம்புரிகளை எடுக்கப் பரதவர் மூழ்கினர் என்ற செய்தி கவனிக்கத்தக்கதாகும். திமிங்கிலத்தை வேட்டையாடிய செய்தியையும் மார்க்கோபோலோ கூறியுள்ளான். இந்தச் செய்தியும் சங்க நூலில் கூறப்பட்ட பெருமீன் வேட்டையோடு ஒத்திருப்பதைக் காணலாம்.

சுருமீனின் வாய் மற்ற மீன்களுக்கு இருப்பதுபோல அமையாது அடியில் இருக்கின்றது. சுருமீனின் வாயைப் போன்று வீட்டின் இறப்பு இருந்ததாக நற்றிணைப்பாட்டு (ஔவை துரைசாமி பிள்ளை பதிப்பு) கூறியுள்ளது.

"திருந்துவாய்ச் சுறவம் நீர்கான் றொய்யெனப்
பெருந்தெரு உதிர்தரு பெயலுறு தண்வளி
போரமை கதவப் புரைதொறும் தூவக்" —நற்றிணை, 132

சுருமீனின் வாயைப்போல அமைந்த நுதலணியை மகளிர் அணிந்ததைப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் மகரக்குழை, மகரவாய் மோதிரம் என்ற அணிகள் கூறப்பட்டுள்ளன. சுருவின் ஈரலில் கொழுப்பு நிறைய உண்டு. அதிலிருந்து சத்துமிக்க மீனெண்ணெய் எடுக்கப்படுகின்றது. 'நிணச்சுரு' என்று சங்கநூல்கள் அழைத்துள்ளன. கடலில் திமிலில் செல்லும் பரதவர் மீனெண்ணெயைக் கிளிஞ்சிலில் இட்டு விளக்கேற்றியதும் சங்கநூல்களில் கூறப்பட்டுள்ளது. சுருமீனின் நிணத்திலிருந்தே மீனெண்ணெயைச் சங்ககாலத்தில் நிறைய எடுத்திருப்பர். சுருமீனைச் சங்ககாலத்தில் மீனெண்ணெய்க்காகவும் உணவுக்காகவும் வேட்டையாடினரென்று கருதலாம். சுருமீன் துண்டை உணக்கிக் கருவாடாகவும் பயன்படுத்தினர். சுருமீன்கள் ஏழு அடி முதல் இருபது அடிவரை வளருமென்பர் ஆனால், ஒருவகைச் சுருமீன் எழுபது அடிவரை வளரும். இதைத் திமிங்கிலச்சுரு என்று கூறுவர். மீனவர்கள் ஓங்கில்சுரு என்றழைப்பர். இத்தகைய பெரிய சுருமீன்களைச் சாட்டுளி வீசிக் கொன்று பிடிப்பர். இதையும் சங்க நூல்களில் பெருமீன் என்று அழைத்திருக்கலாம். சுருமீன்கள் ஏழு அடி நீளமிருந்தாலும் வலிமை மிக்கவை யாதலால் வயச்சுரு என்று சங்க நூல்களில் அழைத்தனர். சுருமீன்கள் பிற மீன் கூட்டங்களை வேட்டையாடி உண்டு வாழும்.

சுருமீன்களில் இருவகை கழிமுகத்திலும் ஆறுகளிலும் கழிகளிலும் வரும் என்று கூறுவர். இந்த இரு சுறவினங்களும் ஆட்கொல்லியெனக் கூறுவர். முண்டன்சுரு என்று தற்காலத்தில் அழைக்கப்படும் சுரு ஆற்றில் கடல்நீர் ஏறும் காலத்தில் வரும். இந்தச் சுருமீனை Carcharius gangeticus என்று அறிவியலில் அழைப்பர். கடலிலிருந்து ஆற்றில் வரும் இன்னொரு சுருமீன் தற்காலத்தில் வள்ளுவன்சுரு என்றழைக்கப்படுகின்றது. இந்தச் சுருவின் உடலில் புலிக்கு இருப்பதுபோலக் கரும்புள்ளிகள் வரியாகக் காணப்படுகின்றன. இந்தச் சுரு மிகவும் கொடுமை வாய்ந்த ஆட்கொல்லியாகக் கருதப்படுகின்றது. இந்தச் சுருவை அறிவியலில் Galeocerdo articus என்று அழைப்பர். இளம்பூரணர் தொல்காப்பிய உரையில் கூறிய ஆற்றுச்சுறவு மேலேகூறிய இருவகைச் சுறவுகளே என்று தெரிகின்றது. கடலிலே வாழும் இந்த இருவகைச் சுறவினங்களும் கடலிலிருந்து குறிப்பிட்ட காலத்தில் ஆற்றிலும் கழிகளிலும் செல்கின்றன. தொல்காப்பியத்தில் "கடல்வாழ் சுறவும்

ஏறெனப்படும்'' (மரபியல் சூத்திரம் 9) என்று கூறப்பட்டுள்ளது. இதற்கு இளம்பூரணர் "பிள்ளைச்சுறவு, யாற்றுச்சுறவு உண்மையின் செய்யுட்காவது கடல்வாழ் சுறவொன்றேயெனப் பிரித்ததான்'' என்று உரையெழுதியுள்ளார். இளம்பூரணர் கூறிய ஆற்றுச்சுறவு கடலிலிருந்து ஆற்றில் செல்லும் இருவகைக் கடல்சுறவினமேயென்று கொள்ள வேண்டும். இளம்பூரணர் கூறும் பிள்ளைச்சுறவு தற்காலம் பால்சுருவென்று அழைக்கப்படுகின்றது. இந்தச் சுறவுமீனை மக்கள் மிகுதியாக உண்கின்றனர். இது பால் நிறமாக, வெண்மையாக இருக்கும். சுறவு வகைகளில் மிகச் சிறியது. இரண்டடிக்கு மேல் வளராது. இந்தச் சுருவை Calcharis Palasorrah என்றழைப்பர். நீலச் சுறவு என்று ஒருவகைச் சுருமீனைக் களவழியும் சீவகசிந்தாமணியும் குறிப்பிட்டுள்ளன.

"காலார்சோ டற்ற கழற்கா லிருங்கடலுள்
நீலச் சுருப்பிறழ்வ போன்ற புனனுடன்'' —களவழி, 9

"காலரசோ டறவெறிந்த கனைகழற்கா லலைகடலுள்
நீலநீர்ச் சுருவினம்போ வெய்த்தோருட் பிறழ்ந்தனவே''
—சிந்தாமணி, 2236

கவசத்தோடுகூடிய போர்வீரனின் கழற்கால்கள் வெட்டப்பட்டபோது கடல்நீரிலே நீலச்சுருவினம் பிறழ்ந்தாற் போன்று குருதியிலே கால்கள் பிறழ்ந்தன என்று கூறப்பட்டுள்ளது. இந்த நீலச்சுரு அறிவியலில் Carcharis melanopterus என்றழைக்கப்படும் சுரு வகையாகவே இருக்கலாம். இந்தச் சுருவிற்கு உடலின் மேல்நிறம் நீலமாக இருக்கும். இந்தச் சுருவை ஆங்கிலத்திலும் நீலச்சுரு (Blue shark) என்றழைப்பர். இதுவும் ஆட்கொல்லியாகும். தமிழ்நாட்டுக் கடலருகில் ஐந்துவகைச் சுருமீன்கள் பெரும்பாலும் காணப்படுகின்றன. இவற்றையே ஆற்றுச்சுரு என்று இளம்பூரணர் கூறினதாகக் கருதலாம். இந்த இரண்டுவகைச் சுருக்களைத் தவிர நீலச்சுருவும், குண்டன் சுருவும், கூரசுருவும் கடலில் உள்ளன. நீலச்சுருவைக் கொப்புளிச்சுரு என்று தற்காலத்தில் அழைக்கின்றனர். குண்டன் சுரு, கூர-சுரு ஆகியவற்றை C. Linbatus, C. Temmenichis என்றழைக்கின்றனர். ஐம்பது அடி முதல் எழுபதடி வரை வளரும் திமிங்கிலச் சுருவை ஆங்கிலத்தில் Whale shark என்றும், அறிவியலில் Rhicodon typus என்றும் அழைப்பர். இந்தச் சுரு மிகப் பெரியதாயினும் கடலில் மீன்களைப் பிடித்து உண்பதில்லை. கண்ணுக்குத் தெரியாத நுண்ணுயிர்களை விழுங்கி வாழ்கின்றது. ஆள்களைக் கொல்லாது.

———

(தொடரும்)

# இசை

## எழுத்து இயல்

[இசைமணி. கா. சங்கரனுர், நெல்லை]

**அறிமுகக் குறிப்பு :**

"மொழி முதற் காரணம் அணுத் திரளாம் ஒலி". மொழி முதற் காரணம் ஒலி; அவ்வொலியே எழுத்தாகும். அவ்வெழுத்துக்களே முத்தமிழையும் அறிவதற்குக் காரணமாய் இருக்கின்றன. இவை பற்றி ஆராய்வதே இக் கட்டுரை.

மொழியின் தோற்றம்

உலகில் மக்கள் ஒன்றுகூடி வாழ வேண்டியவர்கள். அவர்கள் தங்கள் கருத்துக்களை ஒருவருக்கொருவர் வெளியிட வேண்டியது அவசியமாயிற்று. முதன் முதலில் மக்கள் தங்கள் கருத்துக்களை கை-வாய் முதலிய உறுப்புக்களால் சைகைகள் செய்து காட்டி வெளியிடுவாராயினர். இத்தகைய சைகை முறையை இயற்கை மொழி என்பர். இவ்வியற்கை மொழி காட்சியளவில் இருந்து கேள்வியளவில் பரவிற்று. சில ஒலிகளும் ஒலிக் கூட்டங்களும் சேர்ந்து கருத்து வெளிப்பாட்டிற்குக் கருவியாயின.

இவ்வாறு தங்கள் கருத்துக்களையும், உணர்ச்சிகளையும், மற்றவர்க்கு வெளிப்படுத்துவதற்குக் கருவியாக விளங்கும் ஒலித் தொகுதியையே மொழி என்கிறோம். இத்தகைய மொழியை மனிதன் ஒருவனுலேயே பேச முடியும்.

மொழிக்கு ஒலிவடிவு வரிவடிவு என்று இரண்டு வடிவங்கள் உண்டு. பேசுவது ஒலிவடிவு. இது செவிக்கு மட்டும் புலனுகும். எழுதுவது வரிவடிவாகும். இது கண்ணுக்குப் புலனுகும். கண்ணுக்குப் புலனுகாத ஒலியைச் செவிக்குப் புலனுகும் காலத்தாலன்றி மற்றக் காலத்தும் உணருமாறு எழுதப்படுவது வரிவடிவாகும். அஃது எழுதப்படுவதால் எழுத்து எனப்பட்டது. எழுத்துக்கு முந்தியது பேச்சு; பேச்சுக்கு முந்தியது சைகைக் குறிப்பாகும்.

எழுத்து உயிர் எழுத்து, மெய் எழுத்து, உயிர்மெய் எழுத்து, ஆய்த எழுத்து என நான்கு வகைப்படும். உயிர் எழுத்து பன்னிரண்டு. அவை இரண்டு வகைப்படும்.

1. குறில்: அ, இ, உ, எ, ஒ. 2 நெடில்: ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ.

மெய் எழுத்து பதினெட்டாகும். அவை மூன்று வகைப் படும்:

1. வல்லினம்: க் ச் ட் த் ப் ற்

2. மெல்லினம்: ங் ஞ் ண் ந் ம் ன்

3. இடையினம்: ய் ர் ல் வ் ழ் ள்

குறிப்பு: இத் தமிழ் எழுத்துக்கள் யாவரும் அறிந்த னவே யாகும். பின்னர் எழுதப் போகின்ற இசையின் பகுதி களாகிய பண்-கருவி-நாட்டியம் ஆகியவற்றிற்கு இவ் வெழுத் துக்கள் எவ்வாறு பயன்படுகின்றன என்பதைத் தொடர்பு படுத்திப் பார்ப்பதற்காகவே குறிப்பிடப் பட்டுள்ளன.

இசை யின்பத்தை நுகர்வதற்குக் காரணமாக இருப்பது இனிய ஓசையாகும். செவிப்புலனுக்கு மட்டும் இன்பம் தந்து உணர்வூட்டும் இந்த ஓசையையே நாதம் என்பர். இந்த நாதம் பல ஓசைக் கூறுபாடுகளை உடையது. இந்த ஓசைக் கூறுபாடு களை இன்னின்ன ஓசை என்று புலப்படுத்துவது எழுத்தின் ஒலிகளாகும்.

மலரும் மணமும் போல ஓசையும் ஒலியும் இணைந்து உள்ளன. மலரினின்றும் மணத்தைப் பிரிக்க முடியாது. அம் மலரைப் பார்க்காமல் அதன் மணத்தை நுகர்ந்த அளவானே அஃது இன்னின்ன மலரென்று கூறி விடுகின்றோம். அதைப் போல ஒலி வடிவாகிய எழுத்தினின்றும் அதற்குரிய இனிய ஓசையைப் பிரிக்க முடியாது. அவ் வொலியைச் செவிப்புலனால் கேட்ட அளவானே அஃது இன்னின்ன ஓசை என்று கூறி விடு கின்றோம்.

ஓசையின் கூறுபாடுகளைச் சுட்டிக் காட்டப் பண்டைத் தமிழர் ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்ற ஏழு உயிர் நெட்டெழுத்துக் களையே அடையாளமாகக் கொண்டனர். இதனை இசை என் றும், நரம்பு என்றும், பதம் என்றும், எழுத்து என்றும் பெயரிட்டு அழைத்துள்ளனர். மேற்கோள்:

குடுமியான் மலைக் கல்வெட்டில் ச ரி க ம ப த நி என்ற சப்த சுரங்கள் ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்ற உயிர் நெட்டெழுத்துக் களுடன் சேர்ந்து பலவகையாகக் காணப்படுகின்றன.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்றேழும்
ஏழிசைக் கெய்தும் அக்கரங்கள் —பிங்கலம்

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ வெனும்
இவ்வேழெழுத்தும் ஏழிசைக் குரிய —திவாகரம்

நிறை நரம்பிற்றே பண்ணென வாகும்
குறை நரம்பிற்றே திறமெனப் படுமே —திவாகரம்
பண்ணும் பதமேழும் பலவோசைத் தமிழவையும் —சம்பந்தர்
ஏழிசை ஏழ்நரம்பின் ஓசையை —சுந்தரர்
ஏழிசையாய் இசைப் பயனுய் —சுந்தரர்

பண்டைத் தமிழர் ஏழிசையைக் குரல்—துத்தம்—கைக்கிளை—உழை—இளி—விளரி—தாரம் எனப் பெயரிட்டு வழங்கினர். இவற்றை முறையே ஷட்சம்—ரிஷபம்—காந்தாரம்—மத்திமம்—பஞ்சமம்—தைவதம்—நிஷாதம் என்று பெயரிட்டுத் தற்காலத்தில் ச ரி க ம ப த நி என்று வழங்குகின்றனர்.

மேற்கூறிய ஷட்சம் முதலிய பெயர்கள் இந்தியநாடு முழுவதும் வழங்கப்பட்டு வருகின்றன். மேலை நாட்டிலும் ஓசைக் கூறுபாடுகளில் முதல் ஏழு எழுத்துக்களையே (A-B-C-D-E-F-G) குறியீடாக இட்டு வழங்குகின்றனர். (சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ள இணைப்பு முறையே குறியீடாகும்).

எழுத்துக்களாலும், அவற்றின் அளவுகளாலும் உருப் பெற்றது பண். எழுத்துக்கள் ஒலிக்கும்போது தம்முள் குறைந்தும் மிகுதலாலும் ஒரு குறிப்பிட்ட அளவை அடைகின்றன. இந்த அளவையை மாத்திரை என்றும், அலகு என்றும் குறிப்பிடுகின்றோம். வடமொழியில் இதை ஸ்ருதி என்று சொல்லுவார்கள். இந்த அளவுகளை இசை அறிவு முதிர்ந்தவர்கள் மூலம் நன்கு தெரிந்துகொள்ள முடியும். ஒரு பண்ணுக்கு ஏற்பட்ட எழுத்தின் அளவு (ஸ்ருதி) பாட்டின் பல்வகை உணர்வுகளுக்கு ஏற்பக் கூடிக் குறைவதுமுண்டு.

இசை எழுத்துக்களைக் கொண்டு பண்ணப் படுவதால் பண் என்று பெயரைப் பெற்றது. இவ்வாறு எழுத்தில் வைத்துக் கணக்கிடப்பட்ட இசையே பண்ணாகும். பண்ணுதல் என்னும் வினையடியாகப் பிறந்தது பண். நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணம், உதடு, பல், தலை என்னும் எட்டு இடத்திலும், எடுத்தல், படுத்தல், நலிதல், நிறுத்தல், வாய் மூடுதல், ஒலி வேறுபடுத்தல், உருட்டு, தாக்கு என்னும் எட்டு வகையான இசைத் தொழில் பண்ணப்படுதலால், அதற்குப் பண் என்னும் பெயர் அமைந்தது.

மேற்கோள் :

"பாவோடணைத லிசை யென்றார் பண்ணென்றார்
மேவார் பெருந்தான மெட்டாலும்—பாவாய்

எடுத்தல் முதலா விருநான்கும் பண்ணிப்
படுத்தமையாற் பண்ணென்று பார்''
—இசைமரபு

பண் என்பது பல்வகைச் சுவை உணர்வுகளைத் தோற்றுவிக்கும் இயல்புடையது. இதை நிறம் என்றும், வண்ணம் என்றும் கூறுவர். எழுத்து தனித்தும், சில எழுத்துக்களின் சேர்க்கையால் சொல் தோன்றியும் சொற்கள் பல சேர்வதால் சொற்றொடர்களும் ஆவதுபோல, இசை எழுத்துகள் தனித்தும், பல சேர்ந்தும் பண்ணும், பண்ணின் வளர்ச்சியும் ஏற்படுகின்றன.

பண், பொருள்-வடிவம்-குணம் ஆகிய மூன்று தன்மைகளை உடையது. பழம் என்பது பொருள் ஒன்றாயினும் வடிவால் சிவப்பு, மஞ்சள், பச்சை என்றும், குணத்தால் இனிப்பு, புளிப்பு, கசப்பு என்றும் பிரித்து எண்ணுவதைப்போல, பண் என்பதும் குறைந்த (Flot) கூடிய (Sharp) அளவுகளைப் (ஸ்ருதி) பெற்று அதனால் விளையும் குணத்தால் பல சுவைகளையும் பெறுகிறது. பழத்தோடு நிறமும் மணமும் சுவையும் எப்படிப் பிரிக்க முடியாத பொருளாய்க் காணப்படுகின்றனவோ, அதேபோலப் பண்களுக்கான எழுத்துக்களும், அவற்றின் இயல்புகளாகிய சுவைகளும் பிரியாமல் இணைந்து இருக்கின்றன.

பண்களைத் தோற்றுவிப்பதற்குக் காரணமாயிருப்பது வெளிப்பாடும் உள்ளுணர்வுமாகும். (வெளிப்பாடு என்பது இசையின் வெளிப்பாடாகிய எழுத்துக்கள்) இவை ஒன்றிற்கொன்று பிரிக்க முடியாதன; ஒன்றையொன்று தழுவியவை.

இசையைத் தொடங்குமுன் பயன்படும் எழுத்து.

இசையைத் தொடங்கும் முன்பு ''ம்'' என்ற மகர ஒற்றை ஒலித்தே சுருதி சேர்த்தல் வேண்டும்.

**மேற்கோள் பாடல் :**

''மகரத்தி னெற்றாற் சுருதி விரவும்
பகருங் குறினெடில் பாரித்து—நிகரிலாத்
தென்னா தெனாவென்று பாடுவரே லாளத்தி
மன்னுவிச் சொல்லின் வகை''
—இசைமரபு

ஆளத்திக் குரிய எழுத்துக்கள்

கணக்கிடப்பட்ட இசை எழுத்துக்களை விரிவுபடுத்திக் கேட்போரின் மனம் மகிழப் பாடுவது ஆளத்தியாகும். இந்த ஆளத்தி என்ற சொல்லே தற்காலம் ஆலாபனம் எனத் திரிந்துள்ளது. பண்களை விரிவுபடுத்தி ஆளத்தி செய்யும்போது பயன்படும்

எழுத்துக்களை இசைமரபுப் பாடலொன்று நன்கு உணர்த்து கின்றது :

"குன்றாக் குறிலைந்துங் கோடா நெடிலைந்தும்
நின்றூர்ந்த மங்கரந் தவ்வொடு—நன்றாக
நீளத்தா லேழு நிதானத்தா னின்றியங்க
ஆளத்தி யாமென் றறி"

—இசைமரபு

மேற் கூறிய பாடலால் உயிர்க் குறிலாகிய அ-இ-உ-எ-ஒ-ஆகிய ஐந்தும், உயிர்நெடிலாகிய ஆ-ஈ-ஊ-ஏ-ஓ ஆகிய ஐந்தும், மகரம், தகரம், நகரம் ஆகிய மூன்று மெய்யெழுத்துக்களோடு கூடிப் பிறக்கின்ற உயிர்மெய் எழுத்துக்களையே பற்றுக் கோடாகக் கொண்டு ஆளத்தியைத் தொழில் செய்யவேண்டும். என்பதைப் பண்டைத் தமிழர் வரையறை செய்துள்ளனர் என் பதை அறிகின்றோம்.

மூலாதாரத்தினின்றும் நால் விரல்விட்டு எழுந்த உதானன் என்னும் காற்று, நெஞ்சு, தலை, கண்டம் ஆகிய இடங்களாலும், பல், அண்ணம், நாக்கு ஆகிய உறுப்புக்களாலும் உருப்பெற்ற எழுத்துக்களே, இசைக்கும் முதற்காரணமாயின என்பதைப் பண்டைத் தமிழர் புலப்படுத்தியுள்ளதை இதுவரை பார்த் தோம்.

பண்டைத் தமிழர் இசையில் பயன்படுத்திவந்த நெட்டுயிர் களாகிய ஆ-ஈ-ஊ-ஏ-ஐ-ஓ-ஔ என்ற ஏழும் மறைந்து, தற்காலம் ச ரி க ம ப த நி என்று வழங்கிய போதிலும், இசைப் பயிற்சியில் இன்றும் உயிர் எழுத்துக்களையும், மகர ஒற்றையுமே பயன்படுத்தி வருகின்றனர். மேலும் ஆலாபனையின் போதும் சரிகமபதநி என்ற எழுத்துக்கள் பயன்படாமல், பண்டைத் தமிழர் பயன்படுத்திய உயிர்மெய் எழுத்துக்களையே பயன்படுத்தி வருகின்றனர் என்பதும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

நாட்டியத்திற்கும், தோற்கருவிப் பயிற்சிக்கும் தமிழ் எழுத்துக்களே முதற்காரணம் என்பதையும், இன்றும் அவ் வெழுத்துக்களையே பயன்படுத்தி வருகின்றனர் என்பதையும் இனி வரும் கட்டுரைகளில் தொடர்வோம்.

———

பண்என்னும் பாடற்கு இயைபின்றேல் கண்என்னும்
கண்ணோட்டம் இல்லாத கண். —குறள்-௫௭௩

(பாடலொடு பொருந்துதல் இல்லையானால் இசை என்ன பயன் உடையதாகும்).

———

# பாட்டும் கூத்தும் பற்றிய அறக்கட்டளைச் சொற்பொழிவு

''பண்கள் தோன்றிய பழங்காலம் முதல் அண்மைக் காலம் வரை கூத்துக் கலை என்னும் நாடக மேடையானது தரமான இசையைக் காப்பாற்றி வந்திருக்கிறது'' என, மதுரைப் பல்கலைக் கழகத்தில் 1976 மார்ச் 18, 19 நாட்களில் சங்கரதாஸ் சுவாமிகள் அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்தும் போது கவிஞர் புத்தனேரி ரா. சுப்பிரமணியம் குறிப்பிட்டார்.

பாட்டும் கூத்தும் இணைந்து பரவிய பான்மையை நூற்றாண்டு வாரியாகத் தொகுத்துச் சொன்ன கவிஞர், இருபதாம் நூற்றாண்டில் முற்பகுதியில் கே. எஸ். செல்லப்பா ஐயர், கே. எஸ். அனந்தநாராயணய்யர், எஸ். ஜி. கிட்டப்பா, எஸ். வி. சுப்பையா பாகவதர், எம். கே. தியாகராஜபாகவதர், கே. பி. சுந்தராம்பாள், டி. கே. சண்முகம் முதலான பலர் நாடக மேடையில் தரமான இசை முழக்கம் செய்த சிறப்பினைச் சுவையாக வருணித்தார்.

தங்கத்திலே வயிரம் பதித்தாற் போலே சிறு சிறு இணைப்பு உரையாடல்களுக்கு இடையே பாடல் வயிரம் பளிச்சென்று ஒளி வீசியது என்பது கவிஞரின் அருமையான உவமை.

"நாடகமானது முழுவதும் பாடல்களாகவே இருந்தது ஒரு காலம்; பின்னர், பெரும்பாலும் பாட்டு; இடை இடையே உரையாடல் என்ற நிலை. அடுத்த கட்டம் பாதிக்குப் பாதி பாடல் என்ற சமநீதி; அதற்கடுத்த கட்டம் பெரும்பாலும் உரையாடல்; சிறு பகுதி பாடல்கள். பின்னர், முழு நாடகத்தில் மருந்துக்கு ஒன்று அல்லது இரண்டு பாடல்கள்; இப்படியாக நாடகத்தில் பாடல்களின் செல்வாக்கு படிப்படியாகக் குறைந்து, இப்போது பாடல்களே இல்லாத நாடகங்கள் தலைதூக்கி நிற்கின்றன! பாட்டுகள் அறவே இல்லாத நாடகம் முழுமை பெற முடியாது. நாடகமேடையில் ஒரு வளமான - தரமான பாடலைக் கேட்கின்ற இன்பம் - மன நிறைவு - எந்த உரையாடலிலும் கிடைத்து விடாது!'' எனப் பாடல்களின் சிறப்பையும் இன்றியமையாமையையும் தக்க சான்றுகளோடு வலியுறுத்தினர் திரு. சுப்பிரமணியம்.

கீர்த்தனை நாடகங்கள், நொண்டி நாடகங்கள், குறவஞ்சி நாடகங்கள், விலாச நாடகங்கள், பள்ளு முதலான பல வகைகளில் பாட்டுகளின் செல்வாக்கைப் பற்றியும், ஏராளமான குறிப்புகளைத் தமது ஆராய்ச்சிச் சொற்பொழிவிலே அள்ளி வழங்கிய அருமை பாராட்டுதற் குரியது. இரண்டு நாள் சொற்பொழிவுகளுக்கும் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் முத்துச் சண்முகனர் தலைமை ஏற்றார்.

---

# 'கழனி வளமும் காவிரி நீரும்'
# வெளியீட்டு விழா

தமிழ் நாடு அரசின் பொதுப்பணித்துறைத் தலைமைப் பொறியாளராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ள திரு. எஸ். பி. நமசிவாயம், பி.இ. அவர்கள் எழுதியுள்ள 'கழனி வளமும் காவிரி நீரும்' என்ற நூலின் வெளியீட்டு விழா அத் துறைப் பொறியாளர் சங்கத்தாரால் 7-4-1976 அன்று மயிலை உட்லண்ட்சு விடுதியில் நடைபெற்றது. விழாவிற்கு முன்னாள் நடுவர் எஸ். மகராசன் அவர்கள் தலைமை தாங்கினார். தமிழக அரசுத் தலைமைச் செயலாளர் உயர்திரு. வி. கார்த்திகேயன் அவர்கள் நூலை வெளியிட்டார்கள். விழாத் தொடக்கத்தில் சங்கத்தின் சார்பில் திரு. சி. எஸ். குப்புராசு வரவேற்றுப் பேசுகையில், "நூறாண்டுகட்கு மேல் வளர்ந்துவிட்ட பொதுப்பணித்துறையில் எத்தனையோ தலைமைப் பொறியாளர்கள் பதவியிலிருந்தார்கள். ஆனால் பாசனப் பொறியியல் பற்றி ஓர் உயரிய நூலினைத் தமிழிலேயே முதல் நூலாக உருவாக்கித் தந்த பெருமை திரு. நமசிவாயத்தையே சாரும்" என்று குறிப்பிட்டார்.

தலைமை தாங்கிய நடுவர் மகராசன் அவர்கள் நூலை எளிய தமிழில் இலக்கிய நடையில் எல்லோருக்கும் விளங்கக்கூடிய வகையில் உருவாக்கியதற்காகத் திரு. நமசிவாயத்தைப் பாராட்டினார். ஓய்வு பெற்ற நிலையில் இது போன்று மேலும் பல நூல்களை எழுதவேண்டுமென்று அவரை ஊக்கப்படுத்தினார். 1924 இல் காவிரி நதிநீர் பங்கீடு ஒப்பந்தம் ஏற்பட்டதைக் குறிப்பிட்டு, இதுவரையில் தீர்வு காணப்படாத நிலையில் உள்ள காவிரி நீர்ப் பிரச்சினைக்கான நல்ல முடிவை அதே ஆண்டில் பிறந்த திரு. கார்த்திகேயன் காலத்திலாவது காண வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

நூலை வெளியிட்டுப் பேசிய திரு. வி. கார்த்திகேயன் அவர்கள் 'மாநிலங்களுக்கிடையே ஓடும் ஆறு, அல்லது நதி நீரைத் தொடர்புடைய எல்லா மாநிலங்களும் ஒன்று சேர்ந்து ஒத்துழைத்து அந்த நீரைப் பயன்படுத்தி வளத்தைப் பெருக்கவேண்டும் என்ற கருத்தும், சூழ்நிலையும் ஏற்படவேண்டும். இந்த நல்ல சூழ்நிலை உருவாக அனைவரும் பாடுபடவேண்டும். அதற்கு இக் 'கழனி வளமும் காவிரி நீரும்' என்ற நூலும் துணை நிற்கும் என்றார். நாட்டின் வளத்தை நாட்டின் நலனுக்குச் சிறப்பாகப் பயன்படுத்த ஓர் அணுகு முறையை உண்டாக்க வேண்டும் என்றும் அவர் யோசனை கூறினார். இருக்கும் நீர் வளத்தைப் பாழாக்காமல் தேவைக்குத் தக்கவாறு சிக்கனமாகப் பாசனத்திற்குப் பயன்படுத்த வேண்டியதன் முதன்மையை அவர் வலியுறுத்தினார். இவை அத்தனைக்கும் வழிகாட்டும் வகையில் நூலைப் பயனுள்ள வகையில் எழுதித் தந்தமைக்காகத் திரு. எஸ். பி. நமசிவாயத்தைப் பாராட்டினார்.

பாசனத்துறைத் தலைமைப் பொறியாளராகப் பணியாற்றும் திரு. பி. கே. வேதநாயகம் முதல் நூலைப் பெற்றுக்கொண்டார்.

புத்தகத்தை எழுதியவரும் ஓய்வுபெற்ற தலைமைப் பொறியாளருமான திரு. நமசிவாயம் அவர்கள் நன்றி தெரிவித்துப் பேசுகையில் 'காவிரி ஆணைக் குழு ஒன்று அமைவதுதான் இச்சிக்கலுக்கு நிலையான நல்ல முடிவை அளிக்கும்' என்று தெரிவித்தார். திரு. வீரப்பன் நன்றிகூற விழா இனிது முடிந்தது.

---

# செய்திகளும் குறிப்புகளும்

## திருக்கோயில் குடமுழுக்குகள்

**திருஅண்ணுமலே**

திருஅண்ணுமலேயிலுள்ள அண்ணுமலேயார் ஆலயத்தின் குடமுழுக்கு விழா 4-4-76 அன்று காலே சிறப்பாக நடைபெற்றது. இதற்கு முன் 1944 இல் குடமுழுக்கு நடைபெற்றது. இப்போது 50 நூருயிரம் ரூபாய் செலவிட்டுத் திருப்பணி செய்துள்ளனர். அவ்வாறே ஆறு நூருயிரம் ரூபாய் செலவு செய்து குட முழுக்கையும் செய்துள்ளனர். இவை அனேத்திற்கும் பெருங்கொடை வழங்கியுள்ளவர்கள் செட்டிநாட்டுநகரத்தார் என்பது குறிப்பிட வேண்டியதாகும். குடமுழுக்கை யொட்டி 200 சிவாச்சாரியார்களேக்கொண்டு 108 குண்டங்கள் அமைத்து யாக சாலேயைப் பெரிய அளவில் இதுவரை இந்தியாவில் வேறு எந்தக் கோயிலும் செய்யாத வகையில் அமைத்து வழிபாட்டை நடத்தினர். இவ் விழாவை ஐந்து நூருயிரம் மக்கள் நேரில் கண்டு களித்தனர்.

**கூடலழகர்**

மதுரைக்கருகிலுள்ள அழகர் கோயிலான கூடலழகர் கோயில் குட முழுக்கு 4-4-76 அன்று நடைபெற்றது. மிகப் பழமையான இக் கோயிலில் குட முழுக்கு நடைபெறுவது இதுவே முதன் முறையாம்.

**காஞ்சி காமாட்சி கோயில்**

கச்சியம்பதியில் ஆதிசங்கரரால் அமைக்கப்பெற்ற காமாட்சி அம்மனின் திருக்கோயில் குட முழுக்குவிழா 5-4-76 அன்று காஞ்சி காமகோடி பீடாதிபதி செயேந்திர சரசுவதி சுவாமிகளால் நடத்திவைக்கப் பெற்றது. 1944 க்குப்பின் தற்போதுதான் இதற்குக் குட முழுக்கு நடத்தப்பெறுகிறது. விழாவையொட்டிப் பெரிய வண்ணத் திரையோவியங்களின் காட்சியும் அமைக்கப் பெற்றிருந்தது. கோவில் விமானத்திற்குத் தங்க ஓடு வேய்வதற்கு ஆச்சாரிய சுவாமிகள் திட்டமிட்டுள்ளார். ரூ. 1 கோடி செலவில் இத் திருப்பணி நடைபெறும்.

**சென்னேயில் அட்டலட்சுமி திருக்கோயில்**

திருவான்மியூர்க் கடற்கரையில் எட்டு வகையான லட்சுமிகளுக்கும் புதிதாகக் கோயில் ஒன்று அமைக்கப் பெற்றுள்ளது. தென்னிந்தியாவில் இவ்வகையான திருக்கோயில் இதுவரை அமைக்கப்பெறவில்லே. கோயில் விமானம் எட்டடுக்கு மாடிகளாலானது. மகாலட்சுமியும் திருமாலும் மூலவராகத் திகழ்கின்றனர். இதன் திறப்புவிழா 5-4-76 அன்று காலேயில் நடைபெற்றது. கோயில் தற்கால கட்டுமான முறைப்படி கட்டப்பெற்றுள்ளதாயினும் புற அமைப்பு பழைய வடிவை யொட்டியேயுள்ளதாம்.

## உயர்திரு. கைலாசம் அவர்கள் தலேமை நடுவராகப் பதவி ஏற்ருர்

சென்னே உயர்நீதிமன்றம் தலேமை நடுவராக இருந்த உயர் திரு. கே. வீராசாமி அவர்கள் தமது பதவிக்காலம் முடிந்து ஓய்வு பெற்றதை முன்னிட்டுப் பதினேந்தாண்டுகளாக நடுவராக இருந்துவந்த திரு. பி. எஸ். கைலாசம் அவர்கள் தலேமை நடுவராக ஏப்ரல் 8 ஆம் நாள் பதவி ஏற்ருர். மாண்பமை கைலாசம் அவர்கட்கு நம் நல் வாழ்த்துகளேத் தெரிவித்துக் கொள்ளுகிருேம்.

## நீதிமன்றங்களில் தமிழில் தீர்ப்பு இப்போது இல்லை!

நீதி மன்றங்களில் தீர்ப்புகளைத் தமிழில் வழங்குவது ஏப்ரல் 13 முதல் செயல்படும் என்று தமிழக அரசினரால் முன்னர் அறிவிக்கப் பட்டதும், பின்னர் தமிழ்நாடு வழக்கறிஞர் மன்றத்தில் திரு. இராமநாத ஐயர் என்பவர் கொண்டுவந்த தீர்மானத்தின்படி தமிழில் தீர்ப்பு வழங்குதல் வேண்டாமென முடிவு செய்யப்பட்டதும் யாவரும் அறிவர். அதன் பிறகு நீதிமன்றங்களில் தமிழில் தீர்ப்பு வழங்குவது தற்போதைக்கு வேண்டாமென இப்போதுள்ள அரசு தீர்மானித்துள்ளது.

## இறக்கும்போது கொடுபோவதில்லை

'மண்ணில் பிறக்கும் மாந்தர் பிறக்கும்போது கொடுவந்ததில்லை; பிறந்து மண்மேல் இறக்கும்போது கொடுபோவதில்லை' என்ற முதுமொழியை மக்கள் எல்லோருமே உண்மையென உணர்வதில்லை. ஈட்டிய பொருளனைத்தையும் வாழ்நாளிறுதியில் ஈவதென்பது இயலாத செயல் போலத்தான் தோன்றும். இருப்பினும் அதற்கும் துணிந்த உள்ளம் பெற்று விளங்குபவர் இலண்டன் மாநகரக் கோடீசுவரரான டக்ளசு மக்மின் என்பவர்.

தள்ளு வண்டியில் வணிகம்செய்து வாழ்க்கையைத் தொடங்கிய இவர், இறுதியில் தாம் ஈட்டிய 17½ கோடி பவுனுள்ள செல்வத்தைத் தம் தொழிலாளர்கட்கும் ஏழை எளியவர்கட்கும் முதியோர்க்கும் வாரி வழங்கியுள்ளார்.

'பணத்தை வாரி வழங்கும்போது ஏற்படும் மகிழ்ச்சி எனது வாழ்நாளில் எப்போதுமே ஏற்பட்டதில்லை. நான் ஒன்றும் இல்லாதவனாகப் பிறந்தேன். ஒன்றுமில்லாமலே இறக்க விரும்புகிறேன்' என்று அவர் கூறியுள்ளார்.

## இந்தியில் எழுதப்படும் நூல்களுக்குப் பரிசு!

இந்தி மொழியில் நூல் எழுதுவோர்க்கு ஆக்கம் அளிக்கும் வகையில், இந்தி பேசாத வட்டாரங்களைச் சேர்ந்த-இந்தி அல்லாத பிற மொழிகளைத் தாய் மொழியாகக் கொண்ட ஆசிரியர்களால் இந்தியில் எழுதப்படும் சிறந்த நூல்களுக்குப் பரிசு வழங்குவதென, இந்திய மைய அரசின் கல்வி, சமுதாய நலத்துறை அமைச்சகம் ஒரு திட்டம் வகுத்துள்ளது. அதன்படி இவ்வாண்டு 16 நூல்களைப் பரிசுக்குரிய சிறந்த நூல்களாகவும், நூல் ஒன்றுக்கு 1500 ரூபா பரிசளிப்பதெனவும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

## "இறைவன் தந்த இயற்கை" நூலாசிரியர் புலவர் பொ. முனியப்பன் பாராட்டு விழா

கூகலூர் காந்தி கல்வி நிலைய உயர்நிலைப் பள்ளியின் சார்பில் 28-3-76 நடைபெற்ற முப்பெரு விழாவில், காந்தி கல்வி நிலையத்தில், 'இறைவன் தந்த இயற்கை' நூலாசிரியரான புலவர் பொ. முனியப்பன் அவர்கட்குப் பாராட்டு விழா நடைபெற்றது. தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் துணைத்தலைவர் திரு. கே. எஸ். இராமசாமி விழாவிற்குத் தலைமை தாங்கிப் புலவரவர்கட்குப் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்தார். பேராசிரியர் திரு. மா. ரா. போ. குருசாமி M. A., M. Litt. புத்தகத்தை வெளியிட, கோபி கோட்டாட்சித் தலைவர் திரு. T. பிச்சாண்டி, B. Sc. புத்தகத்தைப் பெற்றார். கழக நூலாசிரியரான

புலவர் முனியப்பன் அவர்களைக் கழகத்தின் சார்பில் கழகக் கோவைக் கிளை மேலாளர் திரு. மீனாட்சிசுந்தரம், கோபி வைரவிழா உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. K. K. ராயப்பன், B. A., B. T. ஆகியோர் பாராட்டிப் பேசினர். கழக நூலாசிரியர் புலவர் திரு. முனியப்பன் அவர்கட்கு நம் நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

### குலசை ப. இராமநாத அடிகளின் நான்காம் ஆண்டு குருபூசை விழா

கழகப் புலவரும் சித்தாந்த பண்டிதருமா யிருந்து இறையடி சேர்ந்த குலசை ப. இராமநாத பிள்ளை அவர்களின் நான்காம் ஆண்டு குருபூசை விழா 10-4-76 இல் சைதாப்பேட்டை அருள்மிகு காரணீசுவரர் திருக் கோயிலில் நடைபெற்றது. குருபூசையினை அவர்தம் மாணவர் திரு.மு. ந. மாசிலாமணி, R. I. M. P. இனிது நடத்தி வைத்தார்.

---

## மதிப்புரை

### கழனி வளமும் காவிரி நீரும்

ஆசிரியர் திரு. எஸ். பி. நமசிவாயம், பொறியாளர் சங்கம், தமிழ் நாடு பொதுப்பணித்துறை. சென்னை-5. விலை ரூ. 8-00

தமிழ் மொழியில் பல துறைகளிலும் நூல்கள் வெளிவர வேண்டுமென்ற பேரவா அனைவருக்குமிருப்பினும் அரசுத் துறையில் பெரும்பாலோர் ஆங்கிலத்தை ஆட்சி மொழியாகக் கொண்டுள்ள காரணத்தால் தமிழில் சிந்தனை செய்வதோ, எழுதுவதோ கிடையாது. அதனால்தான் தமிழில் மருத்துவம், பொறியியல் போன்ற அறிவியல் துறைகளில் சிறந்த அறிஞர்கள் நூல்கள் எழுதுவதில்லை. பெரு முயற்சிக்குப் பின் மருத்துவத்தில் ஒரு சில நல்ல நூல்கள் தமிழில் வந்துள்ளன. ஆனால், பொறியியல் துறையிலே தமிழில், அரசுத் துறைத் தலைமைப் பொறுப்பில் இருப்பவர்களிடமிருந்து வெளிவரும் முதல் நூல் 'கழனி வளமும் காவிரி நீரும்' ஆகும்.

பாசனப் பொறியியல் பற்றிய இந்நூல் தமிழ் நாட்டில் பாசனத்திற்குப் பயன்படக்கூடிய வகையில் ஆறு, ஏரி, குளம் ஆகியவற்றின் நீரைப் பயன்படுத்திக் கொள்ளும் வகையினைத் தெளிவாக விளக்குகின்றது. குறிப்பாகத் தமிழகத்தின் வற்றாத ஆறாக ஓடிக்கொண்டிருக்கும் காவிரியின் நீரைப் பற்றியே இந்நூல் பெரிதும் ஆய்கின்றது. அண்டை மாநிலமான மைசூரில் காவிரி தோன்றினும் தமிழ் நாட்டின் தானியக் களஞ்சியமான தஞ்சைப் பகுதியை வளப்படுத்துவது அதுவேயாகும். அதன் நீரைப் பயன்படுத்திக் கொள்வதில் இரு மாநிலங்களுக்கிடையில் அவ்வப்போது சில உடன்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. இப்போது புதிய சிக்கல் எழுந்துள்ளதால் காவிரிநீர் உடன்பாட்டில் உள்ள சிக்கலை மிகத் தெளிவாக எடுத்துவிளக்க இந்நூல் முற்பட்டுள்ளது. சிக்கலும் அச் சிக்கலைத் தீர்க்க அரசுத்துறை அதிகாரிகள் எடுத்துக் கொண்ட முயற்சியும் விரிவாக விளக்கப் பெற்றுள்ளன. இச் சிக்கல் இன்னும் விடுபடாதிருப்பதால் இதுபற்றி ஆயும் அரசுப் பொறியாளர்கட்கு இந்த நூல் பெரிதும் பயன்படும்.

இது தவிர இன்று பலராலும் பேசப்படும் கங்கை காவிரி இணைப்பைப் பற்றி இந்நூல் மிகத் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளது. இணைப்பு எவ்வாறு இயலும்? அதற்கு எவ் வகையில் முயற்சிகள் எடுக்கப்பெற வேண்டுமென்பதை இது நன்கு விளக்கியுள்ளது. இதற்கும் மேலாக முதலில் கோதாவிரி-காவிரி இணைப்பை ஏற்படுத்திவிட்டாலே இப்போது கடலில்போய் வீணாக விழும் கோதாவரி நீரைக் காவிரியில் கலக்கவிடலாம் என்று புதிய எண்ணம் இந்நூலில் வெளிப்படுத்தப் பட்டுள்ளது. 'கங்கை நீர் கோதவரிக்கு வருவதற்குக் காலத்தாழ்ப்பானலும்,தென் மாநிலங்களைப் பொறுத்தவரையில் கங்கை-காவிரி இணைப்புக் கால்வாய்த் திட்டம் பயனளிக்கத் தொடங்குவதில் சுணக்கம் இராது' (பக். 151) இதனை மையமாகக்கொண்டு நீரிணைப்பு வேலை நடைபெறுமாயின் தமிழகத்தின் நீர்வறட்சி விரைவில் நீங்கும்.

இத்தகைய பயனுடைய நூலை, ஆசிரியர் தெளிவான நடையில் இலக்கியச் சுவைமிக்க வகையில் எழுதியுள்ளமை பாராட்டத்தக்கது. அவர் பொறியாளராயிருந்து தமிழில் எழுதிப் பழக்கமில்லாதவர் என்று கூறிக்கொண்டாலும் ஆற்றொழுக்கான அழகு தமிழில் நூலைப் படைத்திருப்பதற்காகத் தமிழுலகம் அவருக்குக் கடமைப்பட்டிருக்கிறது. இந் நூல் பொறியியல் நூல்போலல்லாது சில இடங்களில் பூவியல் நூல் போலவும் சில இடங்களில் பயண நூல் போலவும் சிறந்து விளங்குகிறது. தமிழ் நாட்டு நீர் வளத்தையும், காவிரியின் சிறப்பையும், பாசனத் துறைப் பணியையும் தெரிந்துகொள்ள விரும்புவோர்க்கு இந்நூல் மிகவும் பயனுடையதாகும்.

குறிப்பு: இந்நூல் கழக விற்பனை நிலையங்களிலும் கிடைக்கும்.

## அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்

[ஆசிரியர்: தணிகைமணி டாக்டர் வ. சு. செங்கல்வராயபிள்ளை, சிவாலயா, 18 வெங்கட்ராமன் தெரு, சென்னை-28. விலை ரூ. 7-00]

இந் நூலில் தணிகைமணி யவர்கள், அருள்மிகு அருணகிரிநாத அடிகளின் வரலாற்றினை நன்கு எழுதியுள்ளார்கள். வரலாற்றுப் பகுதி, ஆராய்ச்சிப் பகுதி, அநுபந்தம், அருணகிரிநாதர் போற்றித் திருவகவல் என்னும் தலைப்புகளில் நூல் அமைந்துள்ளது. வரலாற்று ஆசிரியர்களுக்குப் பயன்படும் அரிய நூல்.

## தலைவருள் மாணிக்கம்

[ஆசிரியர்: நெ. து. சுந்தரவடிவேலு, தமிழாலயம், 232, பைகிராப்ட்ஸ் சாலை, சென்னை-14. விலை ரூ. 5 00]

இந்தியநாட்டு விடுதலைக்குப் போராடிய பெருந் தலைவர்களுள் ஒருவரும், தொண்டராக இருந்து நாடு போற்றும் தலைவராக வளர்ந்து, நல்லாட்சி நடத்திக் காட்டியவரும் ஆகிய தலைவர் காமராசர் அவர்களின் வரலாற்றினை இந் நூலாசிரியர் 33 தலைப்புகளில் மிக அழகாகத் தொகுத்துள்ளார். காமராசர் அவர்களின் உண்மைப் புகழினைக் காணவிழைவோர் இந் நூலினைப் படித்தல் மிக மிக இன்றியமையாததாகும்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: வ. சுப்பையா.

# வெளியார் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| கழனி வளமும் காவிரி நீரும் —எஸ். பி. நமசிவாயம் | 8 | 00 |
| சகல செல்வ யோகம் மிக்க பெருவாழ்வு —சு. அ. இராமசாமிப்புலவர் | 2 | 00 |
| நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு —சு. சண்முக சுந்தரம் | 6 | 00 |
| கல்விச்செல்வம் —த. கோவேந்தன் | 2 | 00 |
| நாடகக்கலையின் வரலாறு — எஸ். வி. சகஸ்ரநாமம் | 6 | 00 |
| சிறகுகள் முறியும் —அம்பை | 10 | 00 |
| மு. வ. ஆய்வடங்கல் —சு. வேங்கடராமன் | 12 | 00 |
| கி. வா. ஜவின் சிலேடைகள் —சி. இராம சுப்பிரமணியம் | 5 | 00 |
| எஸ்தர் —வண்ண நிலவன் | 5 | 00 |
| இதோ சில பிரகடனங்கள் —வலம்புரிஜான் | 5 | 00 |
| காதல் கடிதங்கள் —வலம்புரிஜான் | 2 | 00 |
| God the bridegroom (திருக்குறள் இன்பத்துப் பால்) —Rev Arulappa | 3 | 00 |
| பேரின்ப விளக்கம் —R. அருளப்பா | 9 | 50 |
| மு. வ. காட்டிய வாழ்வு —மா. அசோகன் | 4 | 00 |
| வெள்ளி விளக்கு —பி. வி. சுப்பிரமணியம் | 4 | 00 |
| உருகாயோ நெஞ்சமே —டி. ஜி. எஸ். தினகரன் | 2 | 00 |
| சிறுவர் இலக்கியச் செல்வர்கள் —பூவண்ணன் | 8 | 00 |
| ஈசாப் நீதிக்கதைகள் — 3 புத். மு. சு. அருள்சாமி | 6 | 00 |
| டேப் ரெகார்டர் மெக்கானிசம் —வ. அருணசலம் | 12 | 00 |
| தமிழில் நாடகம் —நாரண துரைக்கண்ணன் | 5 | 00 |
| வாட்போக்கிக் கலம்பகம் குறிப்புரையுடன் —மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம்பிள்ளை | 3 | 00 |
| தொல்காப்பியம் பொருட்படலப் புத்துரை-மெய்ப்பாட்டியல் —டாக்டர் சோமசுந்தர பாரதியார் | 5 | 00 |
| கலிங்கத்துப்பரணி —க. ப. அறவாணன் | 4 | 00 |
| இலக்கியமும் திறனுய்வும் —கா. கைலாசபதி | 5 | 00 |
| உலகப் புகழ்பெற்ற பஞ்சதந்திரக் கதைகள் —அனுசுயா இளங்தென்றல் | 3 | 00 |
| இன்பத் தமிழ் ஓசை —டாக்டர் மோ. வாசுகி அம்மையார் | 7 | 00 |

பதிவு எண் : M. 4899


# கழகப் புதிய வெளியீடுகள்

**வெப்பத்தின் கதை**—மா.பா. குருசாமி எம். ஏ., டி ஜி.டி.

அறிவியல் நூல்களைச் சிறுவர்கள் எளிதில் படித்துப் பயன்பெறும் வகையில் நிலம், நீர், தீ, வளி, விண் பற்றிய செய்திகள் கதைப் போக்கில் எழுதப்பட்டுக் கழக வழி வெளி வந்திருப்பதை அன்பர்கள் அறிவர். அவ்வகையில் வெளி வந்துள்ள வெப்பத்தின் கதை என்னும் இச்சிறு நூலின்கண், வெப்பம் என்றால் என்ன? அதன் பயன்கள், தன்மைகள் யாவை என்பன சுருங்கச் சொல்லி விளங்க வைக்கப் பெற்றுள்ளன. ரூ. 3 00

**பொழுதுபோக்கு** —மா. பா. குருசாமி, எம். ஏ., டி. ஜி. டி.

'காலம் பொன் போன்றது' என்ற கருத்தை விளக்கும் வகையில் பொழுது போக்குகளையும் பயனுள்ள பொழுது போக்காகச் செய்ய வழிகாட்டும் அரிய புத்தகம். இதில் பொழுது போக்குகளின் உண்மை, பயன், வகை இன்னபிற செய்திகள் இனிய எளிய தமிழில் எழுதப்பெற்றுள்ளது. எல்லா நூலகங்களிலும் இருந்து எல்லார்க்கும் பயன்பட வேண்டிய புத்தகம். ரூ. 2 00

**பெருந்தகை மு. வ.**

—டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், M.A., M.Lilt. PhD.

தமிழ் நூலாசிரியருள் தலை சிறந்தவரும், நுண்மாண் நுழைபுலமிக்க புலவர் பெருந்தகையுமான டாக்டர் மு. வரதராசனார் அவர்களின் வாழ்க்கை வரலாறு அவர்தம் மாணவர் டாக்டர் பாலசுப்பிரமணியனாரும், புலவர் இரா இளங்குமரனாரும் சேர்ந்து மிகச் செம்மையான முறையில் நல்ல தமிழில் எழுதப்பட்டுள்ளது. டாக்டர் மு. வ. அவர்களைப் பற்றிய முழுமையான வரலாற்று நூல். ரூ. 10 00

**அருணகிரிநாத அடிகள் புராணம் (தண்டபாணியடிகள்)**

—தி. செ. முருகதாச அடிகள் உரை

இதில் அருணகிரிநாத அடிகளின் வரலாறு செய்யுள் நடையில் சுவைபடக் கூறப்பட்டுள்ளது. நூலாசிரியர் வரலாற்றுச் சுருக்கம், முன்னுரை, சிறப்புப்பாயிரம் ஆகிய வற்றுடன் கூடிய சிறந்த புராணம். ரூ. 8 50

**நள ஆண்டு வாக்கிய சைவப் பஞ்சாங்கம்**

நள ஆண்டிற்குரிய இச் சைவப்பஞ்சாங்கம் சோதிடர், ஆர்க்காடு வே. காணநாத நாயகர் அவர்களால் ஆகம முறைப்படி கணிக்கப் பெற்றது. சாதகம் கணிக்கவும், பிற நன்முழுத்தங்கள் பலன்கள் அறியவும் பயன்படும் வகையில் எல்லாச் செய்திகளும் இதன்கண் தெளிவாய் கூறப்பட்டுள்ளன. விற்பனையாளர்க்குத் தக்க கழிவு தரப்படும். ரூ. 1 25

**விரைவில் வெளிவரவிருக்கும் நூல்கள் :**

க. தகடூர் யாத்திரை விளக்கவுரை
—புலவர் இரா. இளங்குமரன்

உ. சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்
—புதுவை பி. எல். சாமி, பி. எஸ்ஸி.


அப்பர் அச்சகம் சென்னை-1.